





தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பரிதாவி கார்த்திகை (16-11-72) [கருணை 2

## கடவுள் வாழ்த்து

### முருகன்

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற வீராறு தோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி அன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி

பன்னிரு கரத்தாய போற்றி பசும்பொன்மா மயிலாய் போற்றி
முன்னிய கருணையாறு முகப்பரம் பொருளே போற்றி
கன்னிய ரிருவர் நீங்காக் கருணைவாரிதியே போற்றி
என்னிரு கண்ணே கண்ணுளிருக்குமா மணியே போற்றி

---

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

*சந்தா அனுப்பவேண்டிய முகவரி:*
*நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், சென்னை-87*
Pin Code No. 600087

# ஐங்கரன்



விநாயகருக்கு 'ஐங்கரன்' என்று பெயர். கோவிலில் போய்ப் பார்த்தால் நான்கு கைகள்தாம் இருக்கின்றன. சிறப்பான துதிக் கையைச் சேர்த்துப் பெரியோர் கள் ஐங்கரன் என்று கூறியிருக்கி ருர்கள்.

சிலர் கணக்குகளுக்கு எல்லாம் நான்கையே உதாரணம் காட்டு கிருர்கள். வேதம், பீடம், யுகம், புருஷார்த்தம், திக்குகள், உபா யம், வர்ணம் எல்லாம் நான்கு என்று சொல்லுகிருர்கள். அது வும் ஓரளவுக்கு நியாயம். பிள்ளை யார் கோவிலுக்குப் போய்ச் சிறு குழந்தைகளைக் கேட்டால் நாலு கை என்றுதான் சொல்லுவார் கள்.

அநுபவமிக்க அர்ச்சகர்கள் யாராவது இருந்தால், ''எதற்கு இப்படிச் சொல்லுகிருய்? சுவா மிக்கு ஐங்கரன் என்ற பெயர் திருமூலர் திருமந்திரத்தில் இருக் கிறது'' என்று, ''ஐங்கரத்தானை, யானை முகத்தானை'' என்று பாடிக் காட்டுவார். ''நான்கு கை போக, துதிக்கை ஒன்று இருக்கிறது. இதைச் சேர்த்துதான் ஐங்கரன் என்று பாடுவார்கள்'' என்று கூறு வார். இது போலவே சிவபிரா னுக்கு ஐந்து முகங்கள்: சத்யோ ஜாதம், வாமதேவம், தத்புருஷம், அகோரம், ஈசானம் இப்படி. ஒரு ஒரு முகத்திலிருந்து ஒரு வேதமும், எல்லா வேதத்தின் மூலமாகிய ப்ரணவம், ஈசான முகத்திலிருந் தும் உற்பத்தியானதாக மகந்யா சத்தில் த்யான ச்லோகத்தில் சொல்லிக் கொண்டு இருக்கி

றேமே? பரமசிவனுக்குப் பஞ்ச முக லிங்கங்கள் இருக்கும் இடங்கள் எல்லாம் நாலு முகம் ஸ்தூல ரூபமாயும் ஈசான முகம் சூக்ஷ்ம ரூபமாகவும் இருக்கிறது.

நேபாளம், திருவானைக்கா, பம்பாய் ராஜதானியிலுள்ள 'ஐஹொளே' முதலிய இடங்களில் காணலாம்.

இதுபோலவே தேவி உபாசனைக்குரிய மந்திர சாஸ்திரங்களில் நாலு திக்கில் நாலு ஆம்நாயங்களைச் சொல்லி, ஊர்த்வ ஆம்நாயத்துடன் பூர்த்தி செய்திருக்கிறது அல்லவா?

யதீச்வரர்கள் சாதுர்மாஸ்ய வியாஸ பூஜா காலங்களில், சங்கராசார்ய பஞ்சகம், வியாஸ பஞ்சகம், திரவிடாதி பஞ்சகம், குரு பஞ்சகம் என்று பூஜா பீடங்கள் எல்லாம் பஞ்சகமாகவே அமைந்திருக்கின்றன அல்லவா?

18-ஆம் நூற்றாண்டில் இருந்த சிருங்கேரி பீடாதிபதிகளால் எழுதி வைக்கப்பட்ட குருவம்ச காவியத்தில் ஸ்ரீ ஆதிசங்கராசார்யர்கள் காசி க்ஷேத்திரத்தில் சிஷ்யருக்கும் தமக்கும் சேர்த்து ஐந்து மடங்கள் ஏற்படுத்தியதாகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறது. யுகங்கள் நாலு என்று சொல்வதோடு ஐந்தாவதான உத்தமோத்தமமான சத்ய யுகத்தையும் சொல்லுகிறது.

புருஷார்த்தங்கள் நான்கானு லும் மோட்சத்தில் ஜீவன் முக்தக்கு மேலிட்ட விதேக முக்தி ஒன்று இருக்கிறது. திக்குகளைக் குறிக்கும் பொழுது ப்ருகதாரண்யத்தில் ஊர்த்துவ திக்கையும் சேர்த்து ஐந்தாகக் குறிக்கிறது. நேர்மையே எல்லாவற்றையும் காட்டிலும் மேலான உபாயம் என்பது ஆன்றோர் கருத்து.

பிரம்மாவின் நாலு அம்சங்களிலிருந்து நாலு வர்ணத்திற்குமேல், மனத்திலிருந்து மானஸிக புத்திரர்களாகச் சனகாதிகள், இவர்களுக்கெல்லாம் மேம்பட்டவராக விளங்கினார்கள்.

பஞ்சாட்சரம், பஞ்சகவியம், பஞ்சாயதன பூஜை, பஞ்ச கோசம், முக்கியப் பிராணன் உட்படப் பஞ்ச ப்ராணன்கள், பஞ்சாக்னி வித்யை, கட்டைவிரல் உட்பட ஐந்து விரல்கள், பஞ்சாமிருதம், பஞ்சமி, பஞ்சபூதேசி, பஞ்சஸங்க்யோபசாரிணி, லலிதா ஸஹஸ்ரநாமத்தில் உள்ளபடி பஞ்ச பூதங்கள், பஞ்ச பூஜா உபசாரங்கள், பஞ்சநதம், பஞ்ச பாண ஹஸ்தையான தேவி, பஞ்ச-ஆப் அல்லது பாஞ்சாலம், மண்டோதரி உட்படப் பஞ்ச கன்னிகைகள், பஞ்ச ஹாரதி, பஞ்சமுக வாத்தியம், பஞ்சபில்வ வருக்ஷங்கள் இப்படிப் பஞ்ச பஞ்சகங்கள். விநாயகருக்கு எப்படித் துதிக்கை மற்ற நான்கு கைகளுக்குச் சோபை தருகிறதோ அது போலவே எல்லா நான்குகளுக்கும் மூலமான ஐந்தாவது சோபை தருகிறது. வேதத்தில் தைத்திரிய உபநிஷத்தில், 'உலகத்தில பார்க்கப்படும் பொருள்கள் எல்லாம் ஐந்து (தாந்தம்) என்ற கணக்கிலேயே அமைந்திருக்கின்றன. ஐந்தாலேயே, ஐந்து வளர்ந்து வலிவடைகிறது' என்று கூறியிருக்கிறது.

இந்தப் புண்ணிய தினத்தில் ஐங்கரனுடைய ஆயிரம் நாமாக்களைச் சொல்லி அர்ச்சிக்க முடியாதவர்கள் (பழைய ஏட்டுச் சுவடியில் உள்ள) இந்த நாமாவை யாவது அநுசந்தானம் செய்து ஐங்கரனுடைய கருணைக்குப் பாத்திரர் ஆவோமாக: காமகோடி பீடவாஸிநே நம:, வித்யா யோக யசோ மோக்ஷ யோக லிங்க ப்ரதிஷ்டாத்ரே நம:

● ஷண்மத ஸ்தாபனுசார்ய ரான ஸ்ரீமத் ஜகத்குரு ஆதி சங்கர பகவத் பாதர்கள் அருளிய சிவ ஸ்தோத்ரங்களில் மிகவும் சிறந்தது சிவானந்த லஹரி. இதில் ஒரு பாடலை யாவது காதால் கேட்பவன் சிவபக்தி இல்லாதவனுயினுங்கூட சிறந்த சிவபக்தனுகி விடுவான்.

● ஈசனுடைய திருநாளே மகா சிவராத்திரி. உருவமற்ற முழு முதற் கடவுள் பக்தர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி, அருபத்துக்கும், ஸ்வரூபத்துக்கும் இடையே உள்ள ஜோதிர்லிங்கமாய் காட்சி அளித்த நன்னுளே இந்த மகா சிவராத்திரி.

● நாம் பண்ணின பாவத்திற்கு அழுது கொண்டிருக்க வேண்டாம். அந்த மாதிரி புத்தியை இனிக் கொடுக்கவேண்டாமென்று பிரார்த்தனை செய்ய வேண்டும்.

● அம்பாளுடைய கருணை நமக்குத் தெரியாது. நமக்கு நல்லது வந்தாலும், கெட்டது வந்தாலும் இரண்டுக்கும் மூலம் அவளுடைய அருள்தான். நல்லது, காரணம் இல்லாத அருள். கஷ்டம், ஒரு காரணத்துக்காக ஏற்படுகிற அருள்.

● நெல்லிப் பொருள்களை உண்டு வருவோரின் இரத்த மண்டலம் வளமுடன் இருக்கும். அவர்களுக்குக் காயம் ஏற்படின் இரத்தம் அதிகமாய் வெளியேருது.

● இரத்த வளம் குறைந்து அதனுல் பலவீனமாய் இருந்தால் திரிபலாப் பொடியை பாலில் கலந்து நாளும் அருந்தி வந்தால் பலவீனம் நீங்கும்.

● இதய பலவீனம் உள்ளவர்கள் நெல்லிகளையோ, நெல்லி லேகியம் முதலியவைகளையோ நாள்தோறும் சாப்பிட்டால் இதயம் வலிவுறும், இரத்தம் தூய்மை பெறும். இரத்தக் குழாய்களில் அடைப்புக்கள் நீங்கி இரத்த ஓட்டம் எளிதாகும்.

● வேதம் ஏற்பட்ட காலத்திலேயே அன்னத்திற்கு அடுத்தபடியாகப் பாலின் பெருமையை நம் முன்னேர்கள் உணர்ந்திருக்கிருர்கள். திருமால் பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பதாக நம் புராணங்கள் கூறுகின்றன.

● ஜாதி, மதம், கொள்கை, பிரதேசம் முதலிய எதைப்பற்றியும் ராமாயணம் சொல்லவில்லை. எத்தனை செல்வமும், கல்வியும், குலப்பெருமையையும் படைத்தவனுயினும், ஒருவன் தன் நிலை தவறி சத்தியநெறியின்று பிறழ்வானுயின் அவன் அழிந்து விடுவான் என்பதும் பொறுமையின் உயர்வும் இந்நூலினின்றும் அறிந்துகொள்ளப்படும் உண்மைகளாகும்.

● ராவணன் பிரம்மாவின் சந்ததியில் உதித்த பிராம்மணன். சாமவேதத்தில் கரை கண்டவன். கடுந்தவத்தின் பயனுக ஏராள

மான ஐசுவரியங்களையும் மகா வல்லமையையும் பெற்றவன். தனக்கு எல்லாச் சக்தியையும் அளித்த இறைவனுக்கே சவால் விடுக்கும் அளவுக்கு அதிகாரம் படைத்தவன். ஆயினும் அவன் தன் நிலைகெட்டு நெறி தவறின தன் விளைவாக எல்லாம் இழந்து ஒழிந்தான்.

● வால்மீகி வேடர் குலத்தில் பிறந்து கல்வி அறிவு கொஞ்சமும் இல்லாதவராக இருந்தும், தமது திட நம்பிக்கையாலும், பக்தியாலும் இந்த ராமாயண காவ்யத்தின் சிருஷ்டிகர்த்தாவாகும் உயர் நிலையை எய்தினர்.

● நமது இந்தியாவில் பல் வேறு கொள்கைகளால் குழப்பம் மலிந்த காலத்தில் அவதரித்து 'அத்வைதம்' என்ற ஒருமைப் பாட்டை சகலரும் ஒப்புக்கொள்ளும்படியாக நிலை நிறுவியவர் ஸ்ரீ ஆதிசங்கரப் பெருமான் என்பது அனைவரும் அறிந்த உண்மை.

● அண்மையில் மைசூர் மகா ராஜா அவர்கள் பழநிக்கு வந்து பழநியாண்டவரை தரிசித்தார்கள். ஆண்டவருக்கு அபிஷேகம், தங்க அங்கி சாத்துபடி, மற்ற அலங்கார பூஜைகளும் நடந்தன. மைசூர் மகாராஜா சிறந்த தெய்வ பக்தர்.

● நம் காரியங்கள் எல்லாவற்றிலும், சொந்த விஷயத்திலாகட்டும், அல்லது பொதுத்துறையிலாகட்டும் நாணயத்திற்கு முதலிடம் அளிக்க வேண்டும்.

● அனுதாபம் நமக்கு ஒரு பெரிய ஆசான். அது நமக்குப் பல விஷயங்களைக் கற்றுக்கொடுத்திருக்கிறது.

● லோக் சபை சபாநாயகர் ஸ்ரீ G. S. தில்லான் தம் மனைவி மக்களுடன் தென்பாக்கம் கிராமம் சென்று காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளை தரிசித்தார். ஆச்சார்யார் ஸ்ரீ தில்லானுக்கும் அவரது குடும்பத்தினருக்கும் தமது ஆசிகளை வழங்கினர்.

● நம் தேசத்து மக்களைப் பாதிக்கும் பிரச்னைகளும் அவர்கள் அனுபவித்து வரும் துன்பங்களும் ஏராளம். அவைகளுக்கு எல்லாம் பிரார்த்தனை ஒன்றினால் மட்டுமே பரிஹாரம் காணமுடியும்.

● கடவுள் பக்தியின் அடிப்படையில்தான் அறநெறியை அமைக்கமுடியும். தெய்விக அறிவுக்கதைகளைக் கேட்பதால் நம் பக்திநெறியைப் பரம்பொருளிடத்துச் செலுத்திக்கொள்ளுதல் கூடும்.

● நம் கோயில்கள் கடவுள் நம்பிக்கையையும் பக்தியையும் உறுதிப்படுத்தி ஒன்றுபடுவதற்கு உதவுகின்றன. கோபுர தரிசனம் செய்வதும், கோயில் விழாக்களில்

ஈடுபடுவதும் நம் மனத்தை கடவுளுடம் திருப்புகின்றன.

● பசுக்களைக் காப்பாற்றுவதற்காக தோட்டங்களிலும், காம்பவுண்டுகளிலும், தரிசு நிலங்களிலும் அகத்திச் செடியைப் பயிர் செய்ய எல்லாரும் முயற்சி செய்ய வேண்டும்.

● ஈசுவர பூஜைக்காக நந்தவனங்களில் கொன்னைப்பூ, மரமல்லிகை, மகிழம்பூ, மந்தாரை, மரஸம்பங்கி போன்ற புஷ்ப விருக்ஷங்களை வளர்க்க வேண்டும்.

● காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமி அவர்கள் முதல் தடவையாக 1962 - ஆம் ஆண்டில் இளையாத்தக் குடியில் ஆகம, சிற்ப சாஸ்திரங்களின் மகாநாடு ஒன்றை நடத்தினார்கள்.

● தீமை எந்த இடத்தில் காணப்பட்டாலும் அது ஒடுக்கப்படவேண்டும் என்பதுதான் ராமாயணத்தின் சாரமான நீதி. தர்மத்தில் ராமனுக்கு இருந்த பற்றுதல் எள்ளளவு சந்தேகத்துக்கும் இடமில்லாதது.

● ஸ்ரீ ராமன் பிறப்பில் க்ஷத்திரியன். ஆனாலும் சாதுக்களும் ரிஷிகளும் அந்தணர்களும் சாதாரண மக்களும் அவனைப் பாகுபாடின்றி வணங்குகின்றனர்.

● தர்மம் சாதுக்களின் வாழ்க்கையில் நிலைத்து நிற்கிறது. சாதுக்களைப் போஷிப்பதன் மூலம் தர்மமும் போஷிக்கப்படுகிறது.

● பள்ளம் கண்ட இடத்தில் தண்ணீர் தேங்கும். மலர் உள்ள இடத்தில் வண்டுகள் வந்துசேரும். அவ்வாறே இறைவன் எழுந்தருளியிருக்கும் தலங்களில் நல்லவர்கள் வந்து கூடுவார்கள்.

● வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒழுக்க முறைகளை வற்புறுத்தியவர் திருவள்ளுவர். எல்லாவற்றிலும் சிறந்தது கடவுள் வழிபாடு என்பதை எண்ணி, கடவுள் வாழ்த்து என்பதைத் திருக்குறளில் முதல் அத்தியாயமாக வைத்தார்.

● நாள்தோறும் உயிர்கள் இவ்வுலகை விட்டு யமலோகத்துக்குப் போய்க் கொண்டே இருக்கின்றன. ஆயினும் இங்கு எஞ்சி இருப்பவர்கள், இங்கேயே நிலையாக வாழ விரும்புகிறார்கள். இதைவிட வேறு ஆச்சரியம் என்ன இருக்கிறது?

● நல்ல காரியத்தைச் செய்வதற்கு எது நல்லது என்று முதலில் தெரிந்திருக்க வேண்டும். இதை எடுத்துச் சொல்ல ஏற்பட்டவை வேதங்களும், இதிகாஸங்களும், ஸ்மிருதிகளும், தர்ம சாஸ்திரங்களும் ஆகும்.

● அஹிம்ஸையும், ஜீவ காருண்யமும் ஹிந்துக்களாகிய

நமக்குப் போதிக்கப்பட்ட போதிலும், நாட்டில் ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான ஆடுமாடுகள் மாமிசத்துக்காகப் பலியிடப்படுகின்றன.

● பஞ்சபூத தலங்கள் ஐந்து. பிருதிவித்தலமாக உள்ளது காஞ்சிபுரம். அப்புத்தலமாக உள்ளது திருவானைக்கா. தேயுத் தலமாக உள்ளது திருவண்ணாமலை. வாயுத்தலமாக உள்ளது திருக்காளாத்தி. ஆகாயத்தலமாக உள்ளது சிதம்பரம்.

● காஞ்சிபுரம் வசிக்க முத்தி தரும் தலமாகும். திருவாரூர் பிறக்க முத்தி, காசி இறக்க முத்தி, காஞ்சி வசிக்க முத்தி, திருவண்ணாமலை நினைக்க முத்தி என்று பெரியோர் சொல்லுவார்கள்.

● உமாதேவியாரும் சிவபிரானும் இளங்குழவியாகிய முருகனை ஞானப்பழம் நீ எனக் காதலோடு அழைத்தமை காரணமாக முருகன் வீற்றிருக்கும் இக்குன்றினுக்கும் இப்பதிக்கும் பெயர் பழநி என்று பெயர் வழங்கப் பெற்றது.

● தேன் ஒரு நல்ல உணவு. தூய்மையான கார்போஹைட்ரேட்டுகள் நிறைந்தது. எனவே எல்லாவகையான கல்லீரல், சிறுநீரகக் கோளாறுகளிலும் கர்ப்ப காலத்திலும் ஆஸ்துமா போன்ற நோய்களுக்கும், தேனையும், திராட்சையையும் சாப்பிட்டால் நல்லது.

● திருநீறு இராவணனாலும் அணிந்து கொள்ளப்பட்டது. எல்லாராலும் எண்ணிப் பார்க்கும் பெருமையுடையது. பராசக்தியின் ஸ்வரூபமானது. பாபத்தை அறுப்பது. மெய்ப்பொருளாக விளங்குவது திருநீறேயாகும்.

● ராமேஸ்வரம், ஆவுடையார் கோவில், சிதம்பரம், கோகர்ணம், பம்பை, திருவெண்காடு, திருவாலங்காடு, வேதபுரி, திருவண்ணாமலை, விருத்தாசலம், காஞ்சி, ஸ்ரீ சைலம், காளஹஸ்தி, கேதாரம், காசி—இவை எல்லாம் பரமசிவனுடைய இருப்பிடமான இந்த நகரங்கள் பூகைலாஸங்கள். மோக்ஷத்தை கொடுக்கும்.

● கெடுதலைப் பேசுவது, கடிந்து பேசுவது, கோள் சொல்வது, பொய் சொல்வது இந்த நான்கு பாவங்களையும் வாக்கினாலும் செய்யக்கூடாது. மனத்தினாலும் நினைக்கக் கூடாது.

● பரீட்சைக்குச் செல்லும் பையன் பெயிலாகிவிட்டால் என்ன செய்வது என்று நினைத்துக் கொண்டே பரீட்சை எழுதினால் பெயிலே ஆகிவிடுவான். பாஸாகிவிடுவோம் என்ற நம்பிக்கையில் சென்றால் பாஸாகிவிடுவான். அதுமாதிரி நம்பிக்கையுடன் அம்பா

னைத் தியானித்தால் நமக்கு க்ஷேமம் உண்டாகும்.

● ஒருவனுக்குப் பொருள் கிடைப்பது அரிது. அதை நல்ல முறையில் தானம் செய்வது அதனினும் அரிது. தகுந்த காலத்தில் தானம் செய்வது அதனினும் அரிது. தானத்தில் ஈடுபாடு இருப்பது இன்னும் அரிது.

● எலுமிச்சம் பழத்தோலை முகத்தில் தேய்த்துக் கழுவிவர முகத்தில் சதா எண்ணெய் வழிதல் மாறும். முகம் வெளுக்கும்.

● தக்ஷிணாமூர்த்தி அலையில்லாத கடல்போல் அசைவற்றிருக்கிறார். நடராஜரோ கூத்தாடுகிறார். தக்ஷிணாமூர்த்தி இருக்க வேண்டிய நிலையைக் காட்டுகிறார். நடராஜரோ தக்ஷிணாமூர்த்தி இருக்கும் நிலையை அடைவதற்கு மார்க்கத்தைக் காட்டுகிறார்.

● சிவனாகவும் சத்தியாயும் பிரிந்தது ஒரே பரம்பொருள். பிரிந்த ஈரிருவரும் அன்பிலொன்றுபட்டு எழுந்த ஜோதி முருகப் பெருமான்.

● தேவாரப் பாசுரங்கள் அனுபூதிமான்களால் அருளிச் செய்யப்பட்டன. ஆதலால் அவை படிப்போர் உள்ளத்தை உருக்குகின்றன. தெய்வபக்தி மக்களிடையே பரவ இத்தேவாரப் பாசுரங்கள் பெருந்துணை செய்கின்றன.

● நல்ல ஒழுக்கம் இருந்தால் போதும் என்றும் கடவுள் இல்லை என்றும் சிலர் கூறுகின்றனர். இது தவறான கருத்து. கடவுள் அருள் இல்லையானால் ஒரு தனி நபருக்கோ, சமூகத்திற்கோ, நாட்டிற்கோ, விமோசனம் ஏற்பட முடியாது.

● இந்து மக்கள் மாதம் ஒரு முறை, வாரம் ஒருமுறை ஒன்று கூடி கூட்டுவழிபாடு நடத்த வேண்டும்; கூட்டு வழிபாட்டினால் நமக்குப் பலன்கள் அதிகம் கிடைக்கின்றன. இந்தத்துறையில் சென்னையில் உள்ள தருமையாதீனப் பிரசார நிலையம் செய்து வரும் தொண்டு போற்றற்குரியது.

● சத்விஷயங்களை அடிக்கடி கேட்பதால், மக்கள் மனம் நல்வழிப்படுகிறது. கந்தபுராணம், தீயசக்தியை ஒடுக்கி நல்ல சக்தியை வளர்க்கத் துணைசெய்யும் வரலாற்றை அறிவிக்கிறது.

● இரவில் தூக்கம் வராமல் படுக்கையில் படுக்கக்கூடாது. அவ்வாறு படுத்தால் நெடுநேரம் வரை தூக்கம் வராமல் புரண்டு கொண்டு பலப்பல தீய நினைவுகளும், ஆசைகளும் உண்டாகச் செய்யும்.

● பிறரைக் கெடுத்துத் தான் மட்டும் வாழ வேண்டும் என்ற எண்ணம் ஆசை. தான் மட்டும் வாழ வேண்டும் என்ற எண்ணம்

பற்று. தானும், தன் இனமும் தன் நாடும் வாழ வேண்டும் என்ற எண்ணம் அன்பு. சராசரம் எல்லாம் வாழ வேண்டும் என்ற எண்ணம் அருள்.

● பூஜைகள் பொதுவாகப் பகலில்தான் செய்ய வேண்டும். சூரியன் அஸ்தமனமான பிறகு செய்யக் கூடாது. இதற்கு விலக்காகச் சிவராத்திரி அன்றும், நவராத்திரி அன்றும் மட்டுமே இரவில் பூஜை செய்வதற்குச் சிறப்பு விதிகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

● துர்க்கை துன்பத்தை நீக்குபவள். இவள் உருவம் மேகம் போல் சிறிது கறுத்திருக்கும். இவள் கையில் அநேக ஆயுதங்கள் இருக்கும். இவளுடைய வாகனம் ஸிம்மம்.

● நாம் உயிர்வாழக் காற்று எவ்வளவு முக்கியமோ, அது போல் புண்ணிய லோகத்திற்குச் செல்ல நாம் தினமும் கடவுளை வழிபடுதல் வேண்டும்.

● ஸ்ரீ கிருஷ்ணர், அர்ஜுனனுக்கு அருளிய உபதேச மொழிகளைக்கொண்டு ஒப்புயர்வற்று விளங்கும் நூல் பகவத்கீதை.

● மிகப் பழங்காலம் முதற்கொண்டு இன்றுவரை மனித வாழ்க்கைக்குப் பயன்பட்டுவரும் பொருள் களிமண். களிமண் சுவரைக் கொண்ட குடிசைகளில் தான் நம் முன்னோர்கள் வாழ்ந்து வந்தார்கள்.

● திருநீறை உடம்பில் பூசுவதால் தொத்துவியாதிகள் வராமல் தடுக்கலாம். அத்துடன் சிறப்பாக நெற்றியில் பூசுவதால் ஞாபக சக்தியையும் புத்தி கூர்மையையும் அதிகப்படுத்தலாம்.

● நாம் செய்யும் நல்ல காரியங்களுக்கு நல்வினைகள் என்று பெயர். தீய காரியங்களுக்குத் தீவினைகள் என்று பெயர் நல்வினைகளால் நமக்கு இன்பம் ஏற்படுகிறது. தீவினைகளால் நமக்குத் துன்பம் ஏற்படுகிறது.

● எவ்வளவு பெரிய செல்வமும் செல்வாக்கும் இருந்தாலும், அவை எல்லாம் சிறிதும் பயன் படாமல், இறைவன் துணையை நாடியாக வேண்டிய ஒரு கட்டம் எந்த மனிதனுடைய வாழ்விலும் ஏற்பட்டே தீரும்.

● வள்ளுவரும், வள்ளலாரும் நமது வாழ்வு வளம்பெறக் கொடுத்துவிட்டுச் சென்ற கருவூலங்கள் இரண்டு. அவை குறட்பா, அருட்பா.

● தத்துவமாய் இருக்கட்டும், சமயமாய் இருக்கட்டும், எதுவாக யிருந்தாலும், நம் வாழ்க்கைப் பிரச்னைகளுக்கு அது வழி காட்டுவதாய் இருக்க வேண்டும் என்பதே, "அருள்" பத்திரிகையின் சித்தாந்தம்.

● உள்ளம் மென்மையுடைய தாய் ஆகிவிட்டால், உலகிலுள்ள சக்திகள் எல்லாம் நமக்கு அனுகூலமாக வேலே செய்யத்தொடங்கும். அந்த நிலேயில், நாம் செய்யும் சிறுசிறு முயற்சிகள் கூட நமக்குப் பெரும் பெரும் வெற்றிகளேத் தந்து கொண்டிருக்கும்.

● துக்கம் என்பது, நம் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துவதற்காக இறைவனுல் அளிக்கப்படுகிற ஒருவரப் பிரசாதம். பாரதத்திலே குந்தி தேவி ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைப் பார்த்து, "நீ அடிக்கடி எனக்குத் துக்கத்தை கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும்" என்று பிரார்த்தனே செய்தது, இங்கு நினேவு கொள்ளத் தக்கது.

● காலேயில் எலுமிச்சம்பழச் சாற்றுடன் சிறிது உப்பு சேர்த்து தலேயில் தடவிக் குளிக்க பொடுகு தீரும்.

● ஸ்ரீ கிருஷ்ணன் குழந்தையாக இருந்து நிறைய விளேயாடினுன். பாலகிருஷ்ணனுக இருந்து விளேயாடினவன் கிருஷ்ணனே. தத்துவ உபதேசம் செய்தவனும் கிருஷ்ணனே. விளேயாடும்போதே சேவையும் செய்தான்.

● ஆகாரங்களில் மிகவும் கொடுமையை விளேவிக்கக்கூடியது புலால். நம்முடைய நாட்டின் வெட்ப தட்ப நிலேமைக்கு முற்றிலும் முரண்பாடான உண்டி மாமிசம்.

● காபி, டீ சாப்பிடுவது நல்லதல்ல. ஆயினும் அப்பழக்கத்தை விட முடியாதவர்கள் காபி சாப்பிடுவதைவிட டீ சாப்பிடலாம். நீர்ப் பொருள்களில் இளநீர் மிகமிக நல்லது. இரத்தத்தை சுத்தி செய்யக்கூடியது.

● சிவபெருமானுக்குரிய விரதங்கள் எட்டு என்று உபதேச காண்டம் கூறுகிறது. இவற்றுள் ஒன்று சிவராத்திரி.

● ஒரு மனிதனுடைய முன்னேற்றத்திற்கு இன்பம் உதவி செய்வதைவிட, அவனுக்கு துன்பமே அதிகமாக உதவி செய்கிறது.

● காய்கறிகளே வேக வைத்துத் தண்ணீர் வடித்துவிட்டு சமையல் பக்குவம் செய்வது, எப்படி என்ருல் பழத்தில் ரசத்தைப் பிழிந்தெறிந்துவிட்டு சக்கையை உண்ணுவது போலாகும்.

● காஞ்சிபுரத்தில் ஆழ்வார்களால் மங்களா சாசனம் பெற்ற வைஷ்ணவ திருப்பதிகள் பதினெட்டு இருக்கின்றன. அவைகளில் முக்கியமானவை வரதராஜப் பெருமாள், வைகுண்டப் பெருமாள், உலகளந்த பெருமாள், அஷ்டபுஜப் பெருமாள் ஆகியவை முக்கியமான கோயில்களாகும்.

● காஞ்சிபுரத்தில் சுமார் 180 பெரிய கோயில்களும், ஏராள

மான சிறிய கோயில்களும் உள்ளன. சைவக் கோயில்கள், வைஷ்ணவக் கோயில்கள், சமண, பௌத்தக் கோவில்களும் காஞ்சியில் உள்ளன.

● பல சுயநலக்காரர்கள் தனக்குரிய கஷ்ட நஷ்டங்கள், ஆசை அபிலாஷைகள், இன்ப துன்பங்கள், வாழ்வு தாழ்வுகள் மற்றவர்களுக்கும் உண்டு என்பது பற்றிச் சிந்திப்பதே இல்லை. தான் மட்டும் சுகமாக இருந்தால் போதும், மற்றவர்கள் எக்கேடும் கெட்டுப் போகட்டும் என்று எண்ணுகிறார்கள்.

● சத்தியம் என்பது வெறும் வார்த்தைகளில் இல்லை. அது நமது எண்ணத்தில், நமது செயலில், நமது சொல்லில் அன்றாட வாழ்க்கை விவகாரங்களில் எல்லாம் அந்த சத்தியத்தைப் பிரயோகிக்க வேண்டும்.

● கடவுளை நம்புகிறவன் முட்டாள் என்றால், கடவுளை நம்பாதவன், அரக்கன், மூடன் என்று சொல்கிறான் கண்ணன். ஒழுக்கம், தவம், சத்தியம், அன்பு ஆகியவற்றை வளர்த்து ஆன்ம சுதந்திரத்தைப் பெற உதவி நிற்கும் கடவுளைத் தெரிந்து கொள்ள முயலாதவனும் முட்டாளே.

● இயற்கையின் பஞ்ச பூதங்களால் ஆனது நம் உடல். ஆகாயம், கதிரவன், காற்று, நீர், மண் என்பன அவை. உடலின் இயக்கம் நடைபெறவும், உடற்கேட்டை நீக்கவும் இந்த ஐந்து பொருள்கள் வேண்டும்.

● நோயாலும், உடலியல் இயக்கத்தாலும் தளர்ச்சியுற்ற உடலுக்கு ஓய்வு தரவேண்டி. விருப்பத்தோடு உணவை நீக்கி இருப்பதே உண்ணாவிரதம் ஆகும்.

● காஞ்சிபுரத்திலுள்ள ஏகாம்பரநாதர் கோயிலில் முக்கியமாகப் பார்க்க வேண்டியவை ஒரே லிங்கத்தில் 1008 லிங்கங்கள் ஏகாம்பரநாதர் சந்நிதி, ஒற்றை மாமரம், விஷ்ணு சந்நிதி, நடராஜர் சந்நிதி முதலியன.

● ஒவ்வொரு ஜன்மாஷ்டமியன்றும் நாம் கிருஷ்ணனைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். அவர் கூறிய அறவுரைகளைப் பின்பற்றுவதாக உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும் அவ்விதம் செய்யாததால் நாம் பல இன்னல்களுக்கு இன்று ஆளாகியிருக்கிறோம்.

● நெல்லி, அல்லது திரிபலாப் பொடியை நெய்யிற் குழைத்து காலை மாலை இரு வேளையும் உண்டு வந்தால் சிரங்கு, புண்கள், வேர்க்குருக் கட்டிகள் தோன்றுவதில்லை.

● வேண்டியதை வேண்டியவாறே நல்குபவள் லக்ஷ்மி. லக்ஷ்மியின் வடிவம் நல்ல சிவப்பு. இவள் இருப்பதுவும் சிவந்த செந்தாமரை. ஐசுவர்யத்துக்கு அன்னையான இத்தேவியின் புகழைப் பாடப்பாட, மக்களால் விரும்பப்

படும் பொருள்களை இவள் வாரி வழங்கி அருள்வாள்.

● இயற்கையில் இயற்கை யாகவே கிடைக்கும் கார்போ ஹைடிரேட்டுகளில் மணமும் சுவையும் மிக்கது தேன் ஒன்றே. உடலுக்கு நலனையும், வலிமையை யும் தருவது தேன் ஒன்றே. தினசரி 4 தேக்கரண்டி தேன் அருந்தலாம்.

● கோவிலுக்குப் போகும் போது சட்டை அணிந்து கொண் டோ, அல்லது போர்த்துக் கொண்டோ செல்லலாகாது. மேல் வேட்டியை இடுப்பில் கட் டிக்கொள்வதுதான் நல்லது.

● ஆவியில் வேகும் உணவு மிகச் சிறந்தது. இட்லி, புட்டு, இடியாப்பம் முதலியன உடலுக்கு சத்தை ஊட்டுவது அல்லாமல் சுலபமாக சீரணிக்கக் கூடியவை. உடல் நலம் இல்லாதவர்களுக்கும் உகந்தவை.

● கறிவேப்பிலை, கொத்த மல்லிக் கீரை முதலியன உண வுக்கு மணம் தருவதுமின்றி, உட லுக்கு பித்த சாந்தியை அளிக்க வல்லவை.

● பொய்யான ஆடம்பரத் தையும், அடிமையில் மோகத்தை யும், ஆண்மையற்ற ஆங்கிலக் கல்வியையும், தீண்டாமையையும் ஆரம்பமுதலே மகாத்மா காந் திஜி எதிர்த்து வந்தார்.

● கூட்டு வழிபாடு மிக அவ சியம். இதனால் ஒருமைப்பாடு உண்டாகிறது. பலதுறையிலும் உள்ளவர்களை கூட்டுவழி பாட்டி னால் சந்திக்க வாய்ப்பு ஏற்படு கிறது. இந்தப் பணியினை தரும புர ஆதீனசமயப் பிரசார நிலை யம் சென்னையில் வெகு சிறப் பாக நடத்தி வருகிறது.

● திருப்பதி ஸ்ரீ ஏழுமலையா னின் நவராத்திரி உண்டி வருமா னம் சுமார் 8 லெட்ச ரூபாயும் தரிசன டிக்கெட் மூலம் சுமார் 1 லட்ச ரூபாயும், லட்டு, வடை விற்பனை மூலம் சுமார் 3 லெட்ச ரூபாயும் வருமானம் வந்திருக்கி றது. இந்த 12 லெட்ச ரூபாயும் 9 நாளில் வந்த வருமானமாகும்.

● சென்னையில் சமீபத்தில் அணுவிரத இயக்க கருத்தரங்கு, தமிழ்நாடு அணுவிரத சமிதித் தலைவரான ஸ்ரீ எம். ஏ. மாணிக்க வேலு அவர்களால் தொடங்கப் பெற்று நடைபெற்றது. முனி ஸ்ரீ சுமர்மால்ஜி 'சுமான்' பேசுகையில் அணுவிரதத்தின் மூலம், மக்கள் அஹிம்ஸையின் சிறப்பை உணரு மாறு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

● காமகோடி பீடத்தில் அம ரும் ஆசாரியர்கள் பிரும்மசரியத் திலிருந்தே சந்நியாசம் பெற வேண்டும் என்றும் ருக்வேதத் தைச் சார்ந்தவர்களாய் இருக்க வேண்டும் என்றும் நியதி உண்டு.

# மணிமொழிகள்



மகாத்மா காந்திஜி

"ராமநாமத்தை ஓதுவதில் விசேஷ பலன் இருக்கிறது என்பது எனது நம்பிக்கை. கடவுள் தன் இதயத்தில் குடிகொண்டுள்ளார் என்ற உண்மையைப் பூர்ணமாய் உணர்ந்துவிட்டவர் மந்திரத்தை ஓத வேண்டிய அவசியமில்லை. ஆனால் அத்தகைய மனிதர் யாரையும் நான் அறிந்ததில்லை. மேலும் ராம நாமத்தை ஓதுவதில் ஒருவித அபூர்வ சக்தி இருக்கிறது என்பது நான் என் சொந்த அனுபவத்தில் கண்ட உண்மை. அது ஏன், எப்படி என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை."

"ராமநாமமே என்னுடைய ஆற்றல். அதுவே எனக்குத் தஞ்சம். நான் இன்னும் உங்களுக்குச் சேவை செய்துகொண்டே இருக்க வேண்டுமென்று நீங்கள் விரும்பினால் நீங்கள் என்னோடு சேர்ந்து கடவுள் நாமத்தைப் பஜிக்கவும் வேண்டும். கடவுளை உங்கள் இதயத்தில் ஏற்றி வைக்கவும் வேண்டும். கடவுள் வளைந்ததை நேராக்குவார். எல்லாம் நமக்காகச் சரியாக்கித் தருவார்."

"ராமநாமம் என்பது வெறும் கண்கட்டி வித்தையன்று. அதன் உட்பொருளை அறிந்து கொள்ள வேண்டும். அப்பொழுதே அது நல்ல பலனைத் தரும். விஞ்ஞானிகள் இடைவிடாது ஆராய்ச்சியும் சோதனையும் செய்ததன் பலனாகத்தாம் கண்ட உண்மைகள் எல்லாவற்றையும் சேர்த்து ஒரு சிறு விதியை வகுத்துக்கொள்வார்கள். அது போன்றதே நான் கூறும் ராமநாமமும்"

"ராமநாமம் என்பது வாயால் மட்டும் பஜிக்கும் பஜனை அன்று கோடிக்கணக்கான இந்துக்கள் சர்வ வியாபியான கடவுளுக்கு ராமநாமத்தைச் சூட்டியிருக்கிறார்கள். ராமநாமத்தில் நாமம் என்னும் பகுதிதான் அர்த்த புஷ்டியுள்ள பகுதியாகும்."

"கொய்னா மாத்திரை சாப்பிடுவது, ராமநாமத்தை எப்படி உபயோகிப்பது என்று கற்றுக்கொள்வதைவிட மிகமிக எளிதாகும். கொய்னா மாத்திரையைக் கொஞ்சம் பணம் கொடுத்து வாங்கி விடலாம். ஆனால் ராமநாமத்தை உபயோகிக்க அதிகமான சிர

மத்தை மேற்கொள்ள வேண்டியது அவசியமாகும்."

"நான் முதன்முதலாக இராமனைச் சீதையின் கணவனாகவே வணங்கி வந்தேன். என்னுடைய அறிவும் அனுபவமும் வளர்ச்சியடைந்த பிறகுதான் இராமனை அமரனாகவும் எங்கு முள்ளவனாகவும்எண்ண ஆரம்பித்தேன்.இதைகொண்டு சீதையின் கணவனாகிய இராமனை வணங்குவதை நான் விட்டுவிட்டதாக என்ன வேண்டாம். முதலில் சீதையின் கணவனாக இருந்த இராமன் பிறகு அதைவிட உயர்ந்த இராமனாக ஆகிவிட்டான். இப்படித்தான் உலகம் முன்னேறுகிறது இராமனைத் தசரதர் புத்திரனாக மட்டும் எண்ணுகிறவர் இராமனை எங்குமுள்ளவனாகக் கருத முடியாது. ஆனால் இராமனைக் கடவுளாக எண்ணுகிறவர்களுக்கு ராமன் எங்குமுள்ளவனாக இருப்பது போலவே அவனுடைய தந்தையும் எங்கு முள்ளவராக ஆகிவிடுவார்."

"ஹிருதய பூர்வமாக ராமநாமத்தைப் பூஜிப்பவர்கள் இணையற்ற ஒரு சக்தியிடமிருந்து உதவி பெறுகிறார்கள். அணுகுண்டைக் கூட அதற்கு இணையாகச் சொல்ல முடியாது. அந்தச் சக்தி சகல துன்பங்களையும் நீக்கக்கூடிய வல்லமை பொருந்தியதாகும். ராமநாம பஜனையை ஹிருதய பூர்வமாகச் செய்ய வேண்டுமென்று கூறுவது எளிது. ஆனால் அப்படிச் செய்வது மிகவும் கஷ்டம். ஆயினும் மனிதன் அடையக்கூடிய மிகப் பெரிய சக்தி அது தான்."

"எப்படி உடம்பு ரத்தமில்லாமல் இருக்க முடியாதோ அது போல் ஆன்மாவுக்கு நம்பிக்கை என்னும் இணையற்றதும், தூய்மையானதுமான சக்தி அவசியம். இந்தச் சக்தி உடம்பின் உறுப்பில் ஏற்படும் பலவீனங்களைப் போக்கும். அதனால்தான்ராமநாமத்தை ஹிருதயபூர்வமாக பஜித்தால் மனிதன் புதிய மனிதனாகின்றான் என்று சொல்லப்படுகின்றது. இந்த விதி இளைஞர், முதியோர், ஆண், பெண் அனைவருக்கும் பொருந்தும்."

"சகல நோய்களுக்கும் ராமநாமமே சஞ்சிவி போன்ற மருந்து என்பது என்னுடைய நம்பிக்கை."

"இருபத்தொரு நாள் உண்ணாவிரத காலத்தில் என்னை உயிரோடு வைத்து உற்சாகமளித்தது நான் ஏராளமாகக் குடித்த தண்ணீருமன்று, பெரிய டாக்டர்கள் பக்கத்திலிருந்து சிசுருஷை செய்து வந்ததுமன்று, என்னுடைய இதயத்தில் இராமன் என்னும் கடவுளை அரியாசனத்தில் ஏற்றி வைத்திருந்ததுதான்."

"நாம சங்கீர்த்தனம் பாடுவதை நான் மெச்சுகிறேன். ஆனால் ஹிருதய பூர்வமாக அதைப் பாட வேண்டும். சொல்லிக் கொடுத்ததைக் கிளிப்பிள்ளைகள் கூடச் சொல்லும்."



# அருள் மொழி



ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசார்ய ஸ்வாமிகள்

தினசரி கோபுர தரிசனம் செய்து, சற்று நேரமாவது கடவுளைத் தியானிக்க வேண்டும். வாரத்துக்கு ஒரு முறையாவது ஆலயங்களுக்குச் சென்று, நாம பாராயணமோ பஜனைகளோ செய்ய வேண்டும். இப்படிச் செய்து வந்தால் சாசுவத நன்மைகளை அடையலாம்.

மனிதன் தன் தவறுகளை நினைத்துப் பார்க்கவேண்டும். அவற்றை உணர்வதே புண்ணியம். ஒருவன் நல்வழிப்பட்டால் அதுவே சமூகத்துக்குக் கௌரவம்; நாட்டுக்கு நலம்.

வழிகள் பல விதம். வாகனங்களும் பல விதம். அநேக மதங்கள் ஏற்பட்டாலும் எல்லாம் ஒரே இடத்தில்தான் போய்ச் சேருகின்றன. ஆகையால் மதத்தின் பெயரால் சண்டை போடத் தேவையில்லை.

சிறுவர்கள் காலையில் எழுந்தவுடன், தங்கள் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு சூரியன் இருக்கும் திசையை நோக்கிக் குறைந்தது 12 நமஸ்காரங்களாவது செய்ய வேண்டும்.

கஷ்டம் நம்முடன் கூடப்பிறந்தது போல் தோன்றுகிறது, கஷ்டம் என்ற பாரத்தை ஞானம் என்ற நீரில் அமிழ்த்தி அதன் பளுவைக் குறைக்க வேண்டும்.

நமது மதம் எக்காலத்துக்கும் மனிதகுலத்துக்கு நன்மை செய்துகொண்டிருக்க வேண்டும் என்று நாம் விரும்பினால் இந்தமதத்தைப் பின்பற்றும் நாம் நல்லொழுக்க முடையவர்களாக இருக்கவேண்டும்; பக்திமான்களாக இருக்க வேண்டும்; நல்லவர்களாக இருக்க வேண்டும்; நமது சிந்தனையிலும் செயலிலும் வைதிக மதத்தின் கோட்பாடுகளை உறுதியாகத் தொடர்ந்து பின்பற்றிவர வேண்டும்.

உண்மைச் சோஷலிஸம் ஆடம்பர வாழ்க்கைத் தரத்தைத் தவிர்த்து, சிக்கனமான வாழ்வை நடத்துவதன் மூலமே ஏற்படக் கூடும். வாழ்க்கைத் தரம் எளிய

அளவிலே இருப்பதுதான் எல்லாருக்கும் நலம். அப்போது எல்லாரும் இன்புற்றிருக்கத் தேசத்தில் போதிய செல்வம் இருக்கும்.

நல்ல உயர்ந்த பண்பட்ட மனத்திலிருந்துதான், தன்னலமற்ற கடமையுணர்ச்சி, தெய்வ பக்தி, எல்லாரிடமும் அன்பு, நல்லெண்ணம் முதலிய நற்குணங்கள் பிறக்கின்றன. இந்த நற்குணங்களுக்குத்தான் பண்பாடு, கலாசாரம் என்று பெயர்.

ஆண்டவனுக்குப் படைக்காமல் வயிற்றுக்காக மட்டும் பொருள்களை நாம் உண்டால், நம்மை உயர்த்துவதற்குப் பதிலாக நாம் தாழ்ந்துவிடுவதற்கு இவை வழி ஏற்படுத்திவிடும். நாம் ஆடம்பரங்களை விட்டு, மிக்க அவசியமான தேவைகளுடன் மட்டும் நிறுத்திக்கொண்டு, கருணாமூர்த்தியான இறைவனின் பிரஸாதங்களாக இவற்றை நன்றியுடன் உபயோகிப்போமானால், நாம் வீழ்ச்சியுறுவது தடுக்கப்படுவதுடன் ஆன்மிக உயர்வு பெறலாம்.

சமயநெறிகள். குலாசாரங்கள் இவற்றின் உண்மைத் தத்துவங்களையும் பிரயோஜனங்களையும் உணர்ந்து, ஒவ்வொருவரும் தம் மதத்தின் தத்துவத்தை அநுபவத்தில் கொண்டு வருதலினாலும், தம்முடையவும் தம் ஜாதியினுடையவும் க்ஷேமநலன்களைவிடப் பிற ஜாதியினரின் கஷ்டங்களைத் தீர்ப்பதையே தம் முதற் கடமை என்று கங்கணம் கட்டிக்கொள்வதனாலும், இவற்றின் பேரால் ஏற்படும் பூசல்களும் சண்டைகளும் நீங்கி ஆத்மக்ஷேமமும் சமூக சாந்தமும் ஏற்படும்.

# கேள்வியும் பதிலும்



ஸ்ரீகாமகோடி பீடம்
ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி
ஸ்வாமிகள்

நமது ஹிந்து மதம் எப்போது தோன்றியது?

நமது ஹிந்து மதத்திற்கு ஆரம்ப காலம் அளவிட்டுச் சொல்ல முடியாது. அதாவது நமது ஹிந்து மதப் பிரகாரம் நான்கு யுகங்கள் சொல்லப்படு கின்றன. க்ருதாயுகம், த்ரேதா யுகம், துவாபரயுகம், கலியுகம் எனப்படுகின்ற ஒவ்வொரு யுக மும் லட்சக் கணக்கான வருஷங் களைக் கொண்டது. இப்படி அநேக லெட்சக் கணக்கான யுகங் களாய் நமது மதம் இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே ஒரு நாள் குறிப்பிட்டு அன்று முதல் இந்து மதம் தோன்றிற்று என்று சொல்ல முடியவில்லை.

இப்படிச் சொல்வதற்கு என்ன ஆதாரம்?

நமது மத நூல்கள்.

நமது மத நூல்கள் யாரால் எப்போது இயற்றப்பட்டன?

நமது மத நூலான வேதங்கள் ஒருவராலும் ஒரு காலத்திலும் எழுதப்படாமல், இறைவனின் மூச்சுக் காற்று வடிவமாகவே இருந்து வருகின்றன இறைவன் அநாதியாய் இருந்து வருகிறார். இறைவனின் மூச்சுக் காற்றின் வடிவமாக வேதங்களும் அநாதி யாக இருந்து வருகின்றன.

காற்று வடிவமாக எவ்விதம் நூல்கள் இருக்க முடியும்?

ஆகாயத்தில் சப்த ஒலிகள் நிறைந்து இருக்கின்றன. ஆகா யத்திலுள்ள சப்தத்தை நாம் அறிந்து கொள்வதற்காக ரேடியோ முதலிய கருவிகளை உப யோகிக்கிறோம். அதன் மூலம காற்றை அடக்கி சப்தத்தை மாத திரம் கேட்கிறோம். சில சமயம் காற்றுடன் சப்தம் வரும்போது "கொர்" "கொர" சப்தம ஏற்படு கிறது. இதன் மூலம் காற்றிலே சப்த ஒலிகளும நிறைந்திருக்கின றன என்று உணர்கிறோம். ஆனுல் இந்த வேதத்தின் கருத்துக்களை

கூட்டாமல் குறைக்காமல் அப்ப டியே வழுவாமல் விசேஷ விஞ் ஞான அறிவுள்ள மகரிஷிகள் அந்த வேத ஒலிகளைக் கிரகித்து, பல சிஷ்யர்களுக்கு உபதேசித்து அதன் மூலம் வாழையடி வாழை யாய் வேதஒலி இங்கு உலவிக் கொண்டு வருகிறது.

எழுதப்படாமலேயே ஒருவர் மற்றவருக்குச் சொல்ல அவர் பல பேருக்குச் சொல்லவே, அநாதி காலமாக வேத ஒலி பரவிக் கொண்டு இருக்கிறது. இப்போது புத்தக வடிவமாகவும் இருந்து வருகிறது.

இந்த வேதத்தின் கருத்துக்களை எல்லாரும் சுலபமாக அறிந்து கொள்ளும் வகையில் ஸ்வரங்கள் முதலியனவைகள் இல்லாமல் ஸ்லோக வடிவமாக, மகரிஷிகள் இயற்றினார்கள். வேதங்களின் ஸ்வ ரங்கள் கருத்துக்கள் மாறுபடா மல் இருப்பதற்காக ஆறு அங்கங் களும் மகரிஷிகளால் நூல்கள் வாயிலாக அருளப்பட்டன. ஆகவே நமது மூல நூலான வேத மானது ஒரு காலத்திலும் ஒருவ ராலும் எழுதப்படாமல் நமது மதம் போல் அநாதியாக வந்து கொண்டு இருக்கிறது.

நமது மதப்பிரகாரம் புல்லாக, மிருகமாகப் பிறந்து மனிதனைகப் பிறந்தானு? அல்லது மனிதனு கவே நேரடியாகப் பிறந்தானு?

உலகம் படைக்கப்பட்டபோது இன்று உலகில் காணப்படக்கூடிய எல்லாவிதமான அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் எல்லாவற்றிலும் ஒவ்வொரு ஜதை படைக்கப் பட்டு அவைகள் மூலமாக ஒவ் வொன்றும் விருத்தி அடைகின் றன. ஆகவே ஒவ்வொன்ருய் பிறந்து கடைசியில் மனித உரு வத்தை அடைந்தான் என்பவைத நமது மதம் ஒப்புக்கொள்ள வில்லை.

மனிதன் எப்போது இறைவனை வழிபட ஆரம்பித்தான்?

மனிதனைகத் தோன்றியது முதல் இறைவனை வழிபட்டு வருகிறுன். மனிதனுய் பிறந்ததே இறைவனை வழிபடுவதற்குத்தான். மனித ஜன்மாவைத் தவிர வேறு எந்தப் பிராணி, ஜன்மாவிலும் இறை வனை வழிபட முடியாது.

இறைவன் எப்படி உள்ளவன்?

இறைவனது வடிவம் சொல்ல முடியாது. அவன் எங்கும் நிறைந் தவனுய் ஜோதிவடிவனுய், ஆனந்த வடிவனுய், அமைதியும் உருவமாயுள்ளவன். ஆகவே அவனை ஒரு வடிவத்தில் கொண்டு நிறுத்துவது கடினம். ஆகையி ஞல்தான் நமது மதத்திலே, அந்த இறைவனை அனுபவங் களின் மூலமாக அறிந்து கொள்ள வேண்டியதற்காக விக்ரஹ வடி வின் மூலமாக அவன் அருள் பாலிக்கிறுன் என்ற கொள் கையை அநாதிகாலமாக ஒப்புக் கொண்டு வரப்பட்டது.

ஏதாவது ஒரு விக்ரஹத்தின் மூலம் அவனை நாம் வழிபட லாமே? எதற்கு இத்தனை விக்ர ஹங்கள்?

எங்கும் நிறைந்துள்ள இறை வன் உலகம் படைக்கப்படுவதற் கும், காக்கப்படுவதற்கும், லயப் படுவதற்கும் சத்தியாக, பிரும்மா —விஷ்ணு—சிவன் என்று மூன்று வடிவமாக சரஸ்வதி—லெட்சுமி - பார்வதி என்று மூன்று சக்திகளை யும் ஏற்படுத்தினுன். இவர்கள் இந்திராதி தேவதைகளின் மூல மாக உலகிற்கு வேண்டிய நன்மை தீமைகளை செய்து வந்தார்கள்.



# பொது தர்மங்கள்

சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்

காயத்ரிக்கு மேல் மந்திரமில்லை தாய்க்கு மேல் தெய்வமில்லை.

பித்ருக்களை அமாவாசை முதலிய தினங்களில் குல வழக்கப்படி அவசியம் ஆராதிக்க வேண்டும். அதனுல் குடும்பத்தில் குழந்தைகள் வாழையடி வாழையாய் நன்கு விளங்குவார்கள்.

சூரியனின் தோஷம் விலக ஸ்ரீ பரமேஸ்வரனை ஆராதிக்க வேண டும்.

சந்திரனின் தோஷத்தால் மனக்கெடுதல் ஆஸ்த்மா, T. B. முதலிய ரோகங்கள் உண்டாகும். இது சுமங்கலி கோபத்தினுல் வரக் கூடியது. இதற்கு ஸ்ரீ அம்பாளை நன்கு ஆராதிக்க வேண்டும். ஜெயமங்கள ஸ்தோத்திரம் 2ம பாகத்திலுள்ளபடி தீபத்தில் மஹா துர்க்கா பூஜை செய்யவும்.

செவ்வாய் தோஷமுள்ளவனுக இருந்தால் ரத்தக் கொதிப்பு, ரத்த தோஷம், சொறி சிரங்கு, பங்காளிகள், வேலைக்காரர்கள் முதலியவர்களின் மனஸ்தாபங்கள் நேரக்கூடும். அதுவிலக முருகன் ஆராதனம், செவ்வாய்க் கிழமை விரதம், ஜெயமங்கள ஸ்தோத்திரத்தில் 6ம் பாகத்தில் உள்ள ஸ்ரீ நாகராஜ சுப்ரமணிய பூஜை, ஸ்ரீ சுப்ரமணிய ரக்ஷை இவை நலன் அளிக்கும்.

புதன் தோஷம் விலக ஸ்ரீ மஹா விஷ்ணுவை அர்ச்சிக்க வேண் டும்.

வயிற்றுவலி நீங்க குருவார விரதம், அரசமர பிரதக்ஷணம் மிக முக்கியமாகும். குருசமாதிக்கு அபிஷேகம், அர்ச்சனை சேங்காலிபுரத்தில் செய்யச் சொல்லலாம்.

சுக்ரன் தோஷம் விலக பசுவுக்கு புல் அளித்து பூஜை செய்ய வேண்டும். ஸ்ரீ அம்பாளையும் ஆராதிக்க வேண்டும்.

சனி தோஷம் விலக சிவனையும் சாஸ்தாவையும் ஆராதிக்க வேணடும்.

ராகு தோஷம் விலக நாகராஜ பூஜையும், தீபத்தில் ஸ்ரீ மகா துர்க்கா பூஜையும் செய்ய வேண் டும். இந்த தீப பூஜையினுல் குடும்பத்தில் ஒற்றுமை குறைவிருந்தால் அது நீங்கி நன்மை உண்டாகும்.

கேதுவின் தோஷம் விலக ஸ்ரீ விநாயகரை அர்ச்சிக்க வேண்டும்.

குளிக தோஷம் குடும்பத்திலிருந்தால் ப்ரேத சாபம், பித்ரு

சாபம் குடும்பத்தில் இருக்கக் கூடும். அதேபோல் குருவுடனோ கேதுவிடனோ குளிகன் சேர்ந்து தோஷமுள்ளவனாக இருந்தால் ஸ்ரீமத் பாகவத ஸப்தாஹத்தை முறைப்படி நடத்தி கஷ்டத்தை நீக்கிக் கொள்ள வேண்டும்.

விவாஹமாக வேண்டிய கன்னிகைகள் ஜெயமங்கள ஸ்தோத்திரத்தில் 5ம் பாகத்திலுள்ள ஸ்ரீ கௌரீ பூஜையை அரை மண்டலமோ ஒரு மண்டலமோ செய்து வரவும்.

ஸ்ரீ மகாவிஷ்ணுவின் கோபம் விலகி புத்ர லாபத்தை விரும்புகிறவர்கள் ஸ்ரீ மத் ராமாயணத்தை முறைப்படி நவாஹமாக நடத்தவும்.

பசித்தவனுக்கு உயிரை அளிப்பது அன்னமே, மனக்கவலைக்கு மருந்து தெய்வந்தான். பரலோகத்திற்குக் கூடவருவது தர்மம் ஒன்றே. கஷ்டங்கள் வராமல் தடுப்பதற்கு வழி சாதுக்களை சரணம் அடைவதே.



---

# வழிபாடு



ஸ்ரீ திருமுருக
**கிருபானந்தவாரியார்**

மின் கம்பியில் கரண்டு இருந் தாலும் பல்பு மூலமாகத்தான் வெளிச்சம் பெற முடியும். அது போல், கடவுள் எங்கும் நிறைந் திருந்தாலும் ஆலயத்தில் சிறந்து விளங்கும் திருவுருவத்தின் மூலம் அருள்பெற முடியும்.

ஊரைச் சுற்றும் பழக்கம் உடையவன், வீட்டிலே தங்க மாட்டான், அதுபோல், வினை பிடித்தவன் கடவுள் பெயரைச் சொல்லமாட்டான்.

படியாதவனுக்கு டாண என் னும் எழுத்து கோடாகவும், படித்தவனுக்கு எழுத்தாகவும் தெரியும். அதுபோல், ஆலயத் தில் இருக்கும் உருவம் பக்தியுடை யோனுக்குத் தெய்வமாகவும், பக்தி யில்லாதவனுக்குக் கல்லாக வும் தோன்றுகிறது.

வைத்து மறந்த பொருளை, ஓடி னாலும், பாடினாலும் எடுக்க முடி யாது; சிந்தனை செய்தால் ஞாப கததிற்கு வரும். அதுபோல், படிப்பாலும், பணத்தாலும் கட வுளைக் காணமுடியாது. பக்தி யினால்தான் காணலாம்.

முக்கியமான நிலையங்களுக்கு அஸ்திவாரக் கல் நாட்டும்போது, மந்திரியை வரவழைத்து அவருக் குத் தங்கக்கரண்டி கொடுப்பது ஏன்? அவரோடு தொடர்பு வைத்துக் கொள்ளத்தானே? அதுபோல் தியானம், பிரார்த் தனை செய்வதெல்லாம் கடவு ளோடு தொடர்பு வைத்துக் கொள்ளத்தான்.

உன் வீட்டில் மின்சாரக் கம்பி கள் பதியவைத்திருக்கின்றன. வீடுகளிலெல்லாம் விளக்குகள் எரிகின்றன. உன் வீட்டில் மட்டும் விளக்கு எரியவில்லை. காரணம்

என்ன? மெயின்லயன் தொடர்பு அறுந்து விட்டது. அதுபோல், எல்லோரும் க்ஷேமமாக வாழ்கிறார்கள். நீ மட்டும் துன்புறும் காரணம் என்ன? இறைவனுக்கும் உனக்கும் உள்ள தொடர்பு இல்லை.

இவ்வுலகில் உள்ள கோர்ட்டில் பீஸ் அதிகம் கொடுத்து, வக்கீல் மூலம் நாம் செய்த குற்றத்தை மாற்றிவிடலாம். ஆனால் ஆண்டவனுக்கு முன்னே எந்த வக்கீலைக் கொண்டு போனாலும் செய்த பாவத்தை மறைக்க முடியாது.

நமக்கு உண்மையான உறவு கடவுள் தான். அதனாலேதான் குழந்தையைத் தாலாட்டும் போது 'ஆராரோ ஆரிவரோ!' என்று பாடுகிறார்கள்.

தூங்கும்போது கனவில் என்ன வெல்லாமோ காண்கிறாயே; நீ வணங்கும் தெய்வத்தைக் கண்டதுண்டா? அல்லது கனவில் சுவாமி வரவேண்டுமென்று நினைத்ததாவது உண்டா?

வீட்டில் களவு போய்விட்டால் போலிசாருக்குத் தெரியப்படுத்து. அதுபோல், உனது துன்பம் தீர கடவுளுக்கு முறையோடு விண்ணப்பம் செய்.

கடவுளை நினைக்க நேரமில்லையே என்றால், பவுடர் பூச, தைலம் தடவ, பல் விளக்க எவ்வளவு நேரமாகிறது? பிரார்த்தனை செய்யமட்டும் நேரமில்லையோ?

காலில் முள் ஒடிந்துவிட்டால் இன்னொரு முள் கொண்டு குத்தி மேலும் துன்பம் கொடுத்தால் தான் ஒடிந்த முள்ளை எடுக்க முடியும். பின்பு வலி தீரும். அதுபோல், நமது துன்பமாகிய வினைகள் தீர மேலும் மேலும் துன்பம் தருகிறார் கடவுள். ஆகவே மனம் கலங்காதே.

விளக்கெண்ணெய்யை மனம் விரும்பிக் குடித்தாலும், மனம் விரும்பாமல் குடித்தாலும், உள்ளே போய் பேதியாகத்தான் செய்யும். அதுபோல், கடவுள் நாமத்தை அன்போடு சொன்னாலும், அன்பு இல்லாமல் சொன்னாலும் பலன் ஒன்றுதான்.

எத்தனைக் காகங்கள் கூடியிருந்தாலும் ஒரு கல்லின் முன் நிற்காது. எவ்வளவு இருள் இருந்தாலும் கதிரவனைக் கண்டவுடன் நீங்கிவிடும். அதுபோல், எத்தனைப் பாவங்கள் அறியாத காலத்தில் செய்திருந்தாலும் கடவுள் நாமத்தைச் சொன்னால் விலகிவிடும்.

புதுமனைவி மத்தியான கடும் வெயிலில் கதம்பம் மலர் கேட்டாலும் துன்பம் தெரிவதில்லை. அதுபோல், கடவுள் அருள்பெற வேண்டும் என்ற ஏக்கம் இருந்தால் பசி, தாகம், துன்பம் தெரியா.

ஊதியம் பெறுவதற்கு உடையணிகின்றீர்களே, ஆண்டவன் அருளைப்பெற என்ன செய்தீர்கள்

குழந்தைக்கு அழுகையும் சிரிப்பும் சொல்லிக் கொடுத்தது யார்? இறையருள் அல்லவா? அவனை இமைப்பொழுதும் மறவாமல் வழிபடு.

ரெடிமேடு கடையில் அவசரத்திற்கு வேண்டிய சட்டைகளும், பனியன்களும் வைத்திருக்கிறார்கள். அதுபோல், பசியைத் தீர்க்க அவசரத்திற்கு வேண்டிய பழவகைகள் ஆண்டவன் நமக்காகப் படைத்திருக்கிறான்.

அவசரமாகச் செய்ய வேண்டியவை ஜெபதபங்கள். ஏனென்றால் திடீர் என்று எமன் வந்துவிட்டால் என்ன செய்வது?

அதிகாரிகள் தயவுபெற ஆபீஸில் காத்து நிற்கின்றீர்களல்லவா? அதுபோல், ஆண்டவன் தயவுபெற ஆலயத்திலும் காத்து நிற்க வேண்டாமா?

சூரிய வெளிச்சம் எங்கும் நிறைந்திருந்தாலும், பூதக்கண்ணாடி வழியாக வரும் வெளிச்சத்திற்கு விசேட சக்தியுண்டு. அதில் நெருப்புண்டாகும். அதுபோல், கடவுள் எங்கும் நிறைந்திருந்தாலும் ஆலயத்தில் அவர் அருள் விசேடமாகப் பிரகாசிக்கிறது.

பாடசாலையில் மாணவர்களுக்கு உண்மை நாணயத்தைத் தெரிவிக்க புத்தகத்தில் படம் மூலமாகக் காட்டுகிறார்கள். அதுபோல், கடவுளைப் பற்றி மனிதன் புரிந்துகொள்ள ஆலயத்தைக் கட்டினார்கள் பெரியோர்கள்.

தந்தை குழந்தைக்கு மிட்டாய் வாங்கிக் கொடுத்தார். குழந்தை தின்னும்போது எனக்குக் கொடு என்றார் தந்தை. சிறிது கிள்ளிக் கொடுத்தது குழந்தை. உடனே தந்தை மகிழ்ச்சி யடைந்து நீயே தின்னு என்றார். அதுபோல், உலகப் பொருள்கள் எல்லாம் ஆண்டவன் நமக்குப் படைத்துத் தந்தார். அதை அவருக்கு நிவேதனம் செய்து உண்டால் அவர் மகிழ்ச்சி யடைவர்.

இங்கே மணியார்டர் செய்தால் அந்தப் பணம் இங்கேயே இருந்தாலும், நாம் குறித்த ஊரில் இருக்கும் அன்பருக்குக் கிடைத்துவிடும். அதுபோல் ஆலயத்தில் நாம் தெய்வத்திற்குப் போடும் மாலைகள் இங்கேயே இருந்தாலும், தெய்வ உலகத்திற்குப் போய்ச் சேர்ந்து விடும்.

ஒரே மின்சாரம் பல வேலைகளுக்கு உதவுகிறது. அதுபோல், ஒரே கடவுள் பல வடிவங்களாக வந்து உதவுகின்றார்.

தண்ணீரால் தேசமெங்கும் மின்சாரம் பரவுகின்றது. அதுபோல், பிரார்த்தனை செய்தால் உடம்பெல்லாம் அருள் மின்சாரம் பரவும்.

ஒருவனுக்கு மனைவியாக இருக்கும் பெண் திருமாங்கல்யம்

போட வெட்கப்படலாமா? அது போல், ஆண்டவன் பிள்ளைகளாகிய நாம் தியானம் செய்யவும், விபூதி பூசவும் வெட்கப்படலாமா?

தூங்கி எழுந்திருக்கும்போது கடவுள் ஞாபகத்தோடு எழுந்திருக்க வேண்டுமே தவிர, கண்டதெல்லாம் சொல்லிக்கொண்டு எழுந்திருக்கக் கூடாது.





திருமுருக கிருபானந்தவாரியார் அவதரித்த
புண்ணிய பூமி காங்கேயநல்லூரில்
5-3-72உ இலட்சதீப விழாவில்
பழநி பரிமள விலாஸ்
S.சித்தனுதன்சன்ஸ் S.குருசாமி அவர்களுக்கு
சதானந்த விபூதி சக்கரவர்த்தி
என்ற பட்டத்தை வெள்ளியினுல் பொறித்த கேடயம் கொடுத்தபோது
எடுத்த படம்.

# வாழ்வின் தத்துவங்கள்



ஸ்ரீ சுவாமி சிதானந்தா

உங்களுடைய எண்ணத்திற்கு ஏற்ப எதிர் காலம் அமையும். ஆகையால் எப்பொழுதும் நல்ல எண்ணங்களையே எண்ண அப்பியாசம் செய்யவேண்டும். இதுவே வெற்றி என்ற இரகசியத்திற்குத் திறவுகோல்.

மனிதன் யோசித்து யோசித்து கெட்ட எண்ணங்களில் சிக்கிக் கொண்டால் அடிக்கடி பிடிவாத மாக நல்ல எண்ணங்கள் பக்க மாக மனதை திருப்பி விடவேண்டும். அப்பொழுதுதான் நீங்கள் ஏதாவது ஒன்று செய்ய முடியும்.

யாருமே தன் அழிவை விரும்ப மாட்டான். ஆனால் எதில் நன்மை இருக்கிறது, எதில் தீமை இருக் கிறது என்பதை கொஞ்சம் பேர் களே அறிவார்கள்.

விவேகத்தின் மூலமாகவே நன் மைக்கும் தீமைக்கும் உள்ள வேறு பாட்டை அறிய முடிகிறது. விவேகம் ஞானத்தினால் வருகி றது. அஞ்ஞானத்தை ஒழித்துக் கட்டினால்தான் ஞானம் உதயமா கிறது.

எவ்வளவோ முயன்ற போதி லும் அஞ்ஞானம் அகலுவதில்லை. கோடிக்கணக்கான ரூபாய்களை பாக்கெட்டில் வைத்துக்கொண்டு சுற்றினாலும்கூட அஞ்ஞானத்தை விரட்டியடிக்க முடிகிறதா?

இதனால் என்ன தெரிகிறது என்றால் அஞ்ஞானத்தை ஒழித் துக் கட்டுவதற்கு அதற்கு நேர் மாறான ஞானத்தைக் கொண்டு வரவேண்டும் என்பதே. இதே மாதிரியாக சுயநலத்தை பரநலத் தால் அகற்றமுடியும். அஞ் ஞானத்தைப் போக்க ஞானம் பெற வேண்டும்.

துர் குணங்களை களைந்தெறிய குணங்களின் வளர்ச்சியினுல்தான் முடியும். எதுவரைக்கும் சாத்து விக குணங்கள் இல்லாமல் இருக் கின்றனவோ, அதுவரைக்கும் பக வத் சாக்ஷாத்காரம் முடியவே முடியாது.

மற்றவர்களுக்கு மகிழ்ச்சி தரும் வகையில் நம் வாழ்வை அமைத் துக் கொள்ள வேண்டும். மற்ற வர்களுக்கு லாபமும் உதவியும் கிடைக்கும் வகையில் அமைத்துக் கொள்ள வேண்டும்.

அது முடியாவிட்டால் குறைந் தது மற்றவர்களின் கஷ்டங்களை, துக்கங்களை குறைக்கவாவது பாடு படவேண்டும். இந்த மாதிரியான வாழ்க்கையே உண்மையில் வாழ்க்கை. இதுவே நம் தர்மமா கும்.

சாந்தி, வெளியில் இருந்து கிடைக்கக் கூடிய பொருள் அல்ல. எதுவரைக்கும் நாம் அதை வெளியில் தேடிக்கொண் டே இருக்கிருேமோ அதுவரைக் கும் சுற்றி அலைகிருேம்.

நாம் உள்முகமாக நாமே தேடும் பொழுது மெதுவாக சரி யான திசையை நோக்கி முன் னேற தொடங்குகிருேம். நமக்கு படிப்படியாக சாந்தி கிடைக்கத் தொடங்குகிறது. இதற்கு வரை யறுக்கப்பட்ட, தொடர்ச்சியான அப்பியாசம் தேவைப்படுகிறது.

நாம் நமக்காக அல்லாமல் மற் றவர்களுக்காக வாழ்கிருேம் என் பதை நம் பண்பாடு கற்பிக்கிறது. நாம் அரை வயிறு உண்டு மற் றவர்களின் பசியைப் போக்க வேண்டும். வாழ்வின் ரகசியம் இதுவே. இதையே வாழ்க்கை என்று சொல்லுகிருேம். இதில் தான் மனித வாழ்க்கையின் உண்மை இருக்கிறது.

நீங்கள் உடல் அல்ல. மனமும் புத்தியும் அல்ல. நீங்கள் திவ்விய மானவர்கள். மகான்கள். நீங்கள் எலும்புகளாலும் சதைகளாலும் ஆன இந்த நாசம் அடையும் உடலாலும் மாறுபடுகின்ற மன தாலும், புத்தியினுலும் தனி, வேறுபட்டவர்.

நீங்கள் நிர்விகல்பம், மாறுதல் இல்லாத, எல்லையற்ற, கண்களுக் குத் தெரியாத ஆத்மா. நீங்கள் வீணுக விஷய வாசனைகளிலும், கஷ்டம் தரும் நிலைமைகளில் கிடக்கின்றீர்கள். விழித்தெழுங் கள். தன்னைத்தானே தெரிந்து கொள்ளுங்கள்.

வாழ்க்கையின் சாதனையும் வாழ்க்கையின் முறைகளும் வேதாந்தத்தின் சுழற்சியே. சாதாரணமாக மனம், வாக்கு, காரியம் இவைகளால் யக்ஞ காரியம் சித்தி பெறுகிறது. இவை களை சுயநலக் காரியத்திற்கு ஈடு படுத்தக் கூடாது. இல்லையென் ருல் இவைகளினுல் அலங்காரமே அபிவிருத்தி அடையும்.

முழுவாழ்வையும் போக்குகளை யும் உயிருள்ள பிராணிகள் அனைத்திற்கும் சேவை செய்வதில்

ஈடுபடுத்த வேண்டும். அவை களின் சுகத்திற்கும் உபகாரத்திற் கும் தியாகம் செய்ய வேண்டும்.

நீங்கள் எப்படிப்பட்டவர்களா கவும் ஆக முடியும். இதுவே காரியம், காரியத்தின் பலன். இது ஒரு நியதி. எந்த ஒரு காரி யத்தைச் செய்த போதிலும் அதற்குப் பலன் அவசியம் உண்டு.

தன் பிராரப்த கர்ம வினைகளுக் குத் தானே பொறுப்பாளி. தன் பாக்கிய நிர்ணயத்திற்குத் தானே காரணமாவான். இன்றே நிச்சயமாகச் செய்யுங்கள். கை வல்யபதம் பெறுங்கள்.

குருவை அடைந்த பிறகும் கூட சிஷ்யனுக்கு ஏதோ குறைவு என்று எண்ணம் தோன்றுமேயா கில், சுகம் தேவை என்று எண்ணு வானுகில் அவனுடைய பக்தியில், விசுவாசத்தில், சாதனையில் தவறு, குறைபாடு இருக்கிறது என்பதுதான் அர்த்தம்.

குருவை அடைந்த பிறகு எல்லா ஆசைகளும், இச்சைகளும் முடிந்து போய் விடுகின்றன. அவன் தன்னைத் தானே குருவி னிடம் சமர்ப்பணம் செய்து விடு கிறுன்.

எவன் பூரணமாக சமர்ப்பணம் செய்து கொள்ள மாட்டானே அவன் ஆண்டவனை அடையமுடி யாது. ஏனென்ருல் ஆண்டவன் கண்களுக்குத் தெரியாமல் இருக் கிறுன். ஆனுல் குரு சாக்ஷாத்கார மாக இருக்கிருர்.

எந்த வேலையை நான் செய்ய முடியாதோ அதை நான் மற்ற வர்களைச் செய்யச் சொல்ல ஒரு போதும் முடியாது.

மனிதப்பிறப்பு முக்கியமாக இரண்டு காரியங்களுக்காக ஆகி இருக்கிறது. பரோபகாரத்திற் கும் பகவத் பக்திக்கும். இந்த அழியக்கூடிய உலகத்தில் க்ஷண நேரமே வாழ்வு.

ஆகையால் இதை மற்றவர் களுடைய நன்மைக்காக ஈடு படுத்த வேண்டும். மனிதன் ஒரு வழிப்போக்கன். வழிப்போக்க னுக்கு எந்த ஒரு இடத்திலும் மோகம் இருப்பதில்லை. அவன் தன் லட்சியத்தையே எப்பொழு தும் நினைத்து வருகிறுன்.

சேவை செய்வதினுல் மனம் தூய்மை அடைகிறது. சந்தோ ஷம் கிடைக்கிறது. இந்த விஷ யங்களை யோசிக்க வேண்டும். இதுவே நமது பண்பின் தத்து வம்.

ஜீவன் பிரம்மத்தின் அம்சமே. இந்த விஷயத்தை நன்ருகப் புரிந்து கொள்ளவேண்டும். இந்த விஷயத்தைப் புரிந்துக் கொண்ட வர்கள் மகான்கள் ஆனுர்கள். அவர்கள் வாழ்வு திவ்வியமாக ஆனது. அவர்கள் ஈசுவரர் ஆனுர் கள்.

புஷ்பம் தன் அழகைக் காட்டு வதற்கு மலருகிறது. விளக்கு ஒளியைத் தருவதற்கு எரிகிறது. ஊதுபத்தி வாசனையைப் பரப்பு வதற்கு எரிகிறது. அதாவது உள்ளே இருப்பதை வெளியே கொண்டு வருவது இயற்கையின் நியதியாகும்.

மனிதனுக்கு உள்ளே தூய்மை இருக்கிறது. ஆத்மதத்துவம் இருக்கிறது. சக்தி, ஆனந்தம், ஒளி இருக்கிறது. அதை வெளியே கொண்டு வரவேண்டும்; நடை முறைக்குக் கொண்டு வரவேண் டும். இதுவே வாழ்க்கை. இதனால் வாழ்வு, ஜீவன் தூய்மை அடை கிறது.

மனிதன் இயற்கையில் கெட்ட வன் இல்லை. அவனுடைய எண் ணத்தில், அவனுடைய பாவனை யில் தீமைகள், விகாரங்கள் உற்பத்தியாகலாம். ஆனால் அதில் மாறுதலையும் கொண்டு வரமுடி யும்

நீ யோகியாக இருந்தால் நல்ல வன் கெட்டவன் என்ற வித்தி யாசம் எப்படி! சமநோக்கு வை. உன்னுடைய பார்வைக்கு மக்களின் குணங்கள் மட்டும் தெரிய வேண்டும்.



# ஸம்ஸ்க்கருத்தின் பயன்

உபயபாஷா வித்வான் ஸ்ரீ K. N. ராமபத்ராசாரியார்

ஸம்ஸ்க்ருதம் தேவ பாஷை. பூலோகத்தில் மஹர்ஷிகள் இதனை மக்களின் நன்மைக்காக முன்பு உலக வழக்கிற்குக் கொணர்ந்தனர்.

'ஸம்ஸ்க்ருதம், என்ற சொல்லுக்கு ஸம்யக்+க்ருதம்' என்று பதம் பிரித்துச் சீர்திருத்தம் செய்யப்பட்ட மொழி என்று முன்னோர் பொருள் உணர்த்தினர். இதனால் முன்பு வழக்கில் இருந்த மொழி மக்களால் வழங்கப்பட்டுச் சிதைவுற்று 'ப்ராக்ருதம்' என்ற பெயரால் வழங்கப்பட்டிருக்க வேண்டுமெனத் தெரிகிறது. ப்ராக்+க்ருதம் ப்ராக்ருதம் என்று வ்யுத்பத்தி சொல்லி முன்னால் செய்யப்பட்டது என்ற பொருளில் இது வழங்கப்படுகிறது.

வியாகரண சாஸ்திரம் இயற்றிய பல ஆசார்யர்களுள், பாணினி முனிவரே ஸூத்ரங்கள் பல இயற்றி ஸம்ஸ்க்ருதம் எனப் பெயர் வரத் தேவ பாஷைக்கு ஏற்பாடு செய்தார்; பாணினி முனிவர் இயற்றிய ஸூத்திரங்களுக்கு, வார்த்திகம் பாஷ்யம் என உரை நூல்களை முறையே வரருசி, பதஞ்ஜலி என்ற முனிவர்கள் இயற்றினர்கள்.

பிராமணர்களைப் பூசுரர் என்று ஸம்ஸ்க்ருத நூல்கள் கூறுகின்றன. எதனால் என்றால், இவர்கள் தேவ பாஷையையே முக்கியமாகக் கொண்டு வேதமோதி மந்திரங்களை ஜபித்து பகவானை வழிபடுகின்றனர். வேதம் ஸம்ஸ்க்ருதமயமாக இருக்கிறது. கடவுளைப் போல நித்தியமானது. இதனையே ஆதாரமாகக் கொண்டு சாஸ்திரம், புராணம், இதிகாசங்கள், காவ்யங்கள், ஸ்ம்ருதிகள் எல்லாம் தோன்றின.

மனிதன் தன் கர்மாவைத் தவறாது செய்ய வேண்டும். கல்யாணத்திலும் மற்ற கர்மாக்களிலும் பிராமணர்கள் ஸம்ஸ்க்ருதவாக்கியங்களாலும், மந்த்ரங்களாலும் க்ரியைகளைச் செய்து வருவதைக் காண்கிறோம். ஸ்ம்ருதி நூல்களும் பிராமணனுக்கு மந்திரத்தாலேயே எல்லாக் கர்மாக்களும் செய்யப்பட வேண்டும் என்கின்றன.

நாமகரணம், உபநயனம், கல்யாணம் மற்ற சுப கர்மாக்கள், அசுப கர்மாக்கள் ச்ராத்தம் முதலியன நடைபெறும் போது, ஆசார்யனான ப்ருஹஸ்பதி ஸம்ஸ்க்ருத வாக்கியங்களையே (காரிகை

களையே) சொல்லிக் க்ருஹஸ்தர் களுக்கு உதவுகின்றார்.

மனுஷ்யன் வாழ்நாளில் பெரும் பொழுதினை வீணே கழிக்கிறான். அவ்வாறில்லாமல் ஒவ்வொரு நாளும் சிறிது நேரமாயினும், ஸம்ஸ்க்ருதம் பயின்று பொருள் தெரிந்து பக்தி சிரத்தையுடன் ஸ்தோத்திரங்களைச் சொல்லிப் பிறவிப் பெரும்பயனைப் பெற முயற்சிக்க வேண்டும்.

ஆசார்யாள் பகவானைப்பற்றிப் பல தோத்ரங்களை இயற்றியருளி ஆபால கோபாலம் கடைத்தேற வகை செய்திருக்கிறார்கள். அத் துதிகளைப் பரவசமாகச் சொல்லவும், பரமானந்த மடையவும் வடமொழிப் பயிற்சி இன்றியமையாததன்றோ!

ப்ராஹ்மணர்கள் காயத்ரி மந்திரம் ஜபிக்கின்றனர். மந்த்ராக்ஷரங்களே தேவதைகளாக பாவிக்கப்படுகின்றன. மந்த்ரம் ஜபித்தால முகத்தில் தேஜஸ் ஏற்படுகிறது. ஆலயங்களில் ஆவாஹன மந்த்ரத்தால் மூர்த்திகளில் ஸான்னித்யம் வரச் செய்து பூஜை செய்கின்றனரே. அரசர்கள் ஆதரவு முற்காலத்து இருந்ததால்தான், வடமொழியில் கணக்கற்ற நூல்கள் அறுபத்துநான்கு கலைகளையும் விளக்கி வரப் பூர்வகாலப்பண்டிதர்களுக்கு வசதி ஏற்பட்டது. ஆகவே ஆஸ்திகப் பெருமக்கள் நம் ஸநாதன தர்மத்திற்கு மூல காரணமான ஸம்ஸ்க்ருத பாஷையைப் பரப்ப, ஒவ்வொரு பேட்டையிலும் தவறாது தினந்தோறும் நம் சிறுவர்கள் படித்து இன்புற வசதி செய்து தருவார்களாயின், பரமாசாரியாளது அனுக்கிரஹ பலத்தால் நம் ஸநாதன தர்மம் நிலைக்கும்.

ஸம்ஸ்க்ருதம் உலக பாஷையாக இருந்தது என்று நைஷத மஹாகாவ்யம் எழுதிய ஸ்ரீ ஹர்ஷ மஹாகவி, நைஷதத்தில் தமயந்தியின் சுயம்வரத்தின்போது, பற்பல பாஷைகள் பேசும் பற்பல அரசர்கள் சுயம்வர மண்டபத்தில் கூடியவர்கள் பொதுப் பாஷையாக வடமொழியையே கைக்கொண்டனர் என்று விளக்குகின்றார்.

ஒவ்வொரு ஆஸ்திகரும் தம்மால் இயன்ற அளவு, தக்க பண்டிதர்களின் உதவியைக் கொண்டு தாமும் ஸம்ஸ்க்ருதம் படித்து, தம குழந்தைகளுக்கும் இப்பயிற்சியை அளித்து, ஸநாதன தர்மத்தைத் தழைக்கச் செய்ய முன் வருமாறு அன்பு கலந்த வணக்கத்தோடு வேண்டி எல்லாம் வல்ல பகவானும், பரமாசார்யாளும் நம்முயற்சி ஸபலமாகக் கருணை புரிவார்களாக.



# வளமாக வாழ வழி



ஸ்ரீ வி ஜி. பன்னீர்தாஸ்

கடமை ஒவ்வொருவருக்கும் உண்டு; அதைச் சரிவரச் செய்து விட்டால் வாழ்க்கை வளம் மிகப் பெற்றுவிடும்.

மக்கள் பணவுடைமை ஆட்சியி லும் வளம் பெறமாட்டார்கள். பொதுவுடைமை ஆட்சியிலும் வளம் பெறமாட்டார்கள்.

எந்த நாட்டிலும் அரசியல் கொள்கைகளோ, அரசியல் கட்சி களோ மக்களுக்கு உண்மையில் வாழ்வை அளிப்பதில்லை. மக்க ளின் வாழ்வும் தாழ்வும் மக்களின் கையில்தான் இருக்கிறது. வேறு எவர் கையிலும் இல்லை.

சமுதாயத்திலுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு கடமை உண்டு. சமுதாயத்துக்கு அவன் செய்ய வேண்டிய முக்கிய கடமை அது.

என்ன கடமை?

வாழ்வில் ஒவ்வொருவனும் தன் பிழைப்புக்காக ஏதேனும் ஒரு தொழில் செய்தே ஆக வேண்டியது இருக்கிறது. வியா பாரி வாணிபம் செய்வதும், எழுத் தாளன் கதை எழுதுவதும், கூலிக் காரன் மூட்டை சுமப்பதும் அவ னவனுடைய வயிற்றுப் பிழைப் புக்காகத் தானேயன்றி வேறல்ல.

ஆனால் அந்தத் தொழிலை அவன் தன் வயிற்றுப் பிழைப்புக் காக என்று எண்ணிவிடக் கூடாது. தன் பெண்டாட்டி பிள்ளைகளைக் காப்பாற்றுவதற் காக என்று கருதிவிடக் கூடாது.

இவ்விரண்டுக்கும் மேலாக மக் கட் சமுதாயத்துக்குச் செய்யப் படுகிற ஒரு தொண்டாகத் தன் தொழிலை அவன் கருதிக்கொள்ள வேண்டும்.

அப்படிக் கருதும்போது, 'நான் என் குடும்பம்' என்னும் குறுகிய நோக்கங்கள் அவன் உள்ளத்தை விட்டு மறைந்து விடுகின்றன.

"இந்தச் சமுதாயம் இதுவரை யில் எனக்கு என்ன நன்மை செய் திருக்கிறது?'' என்ற தன்னலப் பான்மை ஒழிந்து, "இந்தச் சமு தாயத்துக்கு இது வரையில் நான் என்ன நன்மை செய்திருக்கி றேன்?'' என்ற பொது நலப்பான் மையும் கடமை உணர்ச்சியும் புத் துயிர் பெறுகின்றன.

"எனக்கு அது வேண்டும்! இது வேண்டும்! என்னும் உரிமை உணர்ச்சிகள் ஒழிந்து போய்க் கடமை உணர்ச்சி மேலோங்கும் போது தான் மக்கள் அறவாழ் வில் ஈடுபடுகிறார்கள். அதுவே அவர்கட்கு வளமான வாழ்வை யும் அமைதியையும் அளிக் கிறது.''

# மேலமாம்பலம் ஸ்ரீ சங்கரமடம்

ஸ்ரீ எஸ். வரதராஜன்

சென்னையிலிருந்து சுமார் ஆறு மைல்களுக்குத் தெற்கில் மாம்பலம் என்ற மஹோபில க்ஷேத்திரம் ஆதியில் சிறு குக்கிராமமாயிருந்து ஸ்ரீ காசி விஸ்வநாதர் ஆலயத்திற்குத் தென்னண்டையில் ஸ்ரீ சங்கர மடம் 1958-ல் ஸ்தாபிக்கப்பட்டது. நாளடைவில் அநேக ஆஸ்திகர்கள் குடியேற மேற்கு மாம்பலம் என்ற நகரமாக விரிவு அடைந்து வருகிறது.

சாஸ்த்ர ரத்னகரம் தேதியூர் ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள் இவ்விடம் நமது சமூக பொதுப் பணிகளாகிய பஜனை, உபன்யாசங்கள், ஸ்ரீ சங்கர ஜயந்தி, நவராத்ரி முதலிய திருவிழாக்களும், ஆவணியவிட்டம், வேத பாராயணம் ஹோமங்கள், யாகங்கள் லோக க்ஷேமங்களை உத்தேசித்து சத்காரியங்கள் இவை நடக்கத் தகுந்த ஒரு மடம் ஸ்தாபிக்க, பின்னி ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்களைத் தூண்டுவிக்க அவருடைய முயற்சியால் பல தனிக தர்ம பக்தர்களின் சகாயத்தைக் கொண்டு நடுநாயகமாய்ப் பரந்த விசாலமான, அழகும் அருளும் ததும்பி பரவசமாக்கும் ஒரு சங்கரமடம் ஸ்தாபிக்கப்பட்டது.

K. ஜயராம அய்யர் அவர்கள் வாங்கித் தந்துதவிய நிலப்பரப்பில் இம்மடம் ஸன்னிதி அமைக்கப்படடு, ஸ்ரீ S. V. ராம்பாபு அவர்கள் உதவியால் முன் மண்டபம் அமைக்கப்பட்டது.

மடத்தில் ஆச்சார்யாளின் பாதுகைகளை ஸ்தாபித்து ஸ்ரீகாமகோடி பீடாதிபதி, நடமாடும் தெய்வமான ஸ்ரீ பெரியவாள்-புதுப் பெரியவாளுடன் தன் திருக்கரங்களினல் கும்பாபிஷேகம் நடத்தி வைத்ததுடன் பல நாட்கள் இங்குத் தங்கி ஸ்ரீ காமகோடி சமேத ஸ்ரீ சந்திர மௌளீச்வரர் மஹா பூஜைகளை நடத்தி வந்தார்கள்.

பக்திப் பரவசம் அடைந்த ஆயிரம் ஆயிரம் மக்கள் ஸ்வாமிகளைத் தரிசித்து அருள் பெற்றது, பெரும் வைபவ விழாக் காட்சியாக விளங்கியது.

அச்சமயம் ஸ்ரீ பெரியவாளின் உத்தேசப்படி, சேர்ந்த தென்னஞ் சோலையும் வாங்கப்பட்டது. அதில் பூஜை செய்யும் சாஸ்திரிகளுக்கு ஒரு விடுதியும், ச்ராத்தாதி காரியங்கள் செய்யத்தகுந்த இரண்டு கட்டிடங்களும் சகல வசதிகளுடன் கட்டப்பட்டிருக்கின்றன.

சன்னதியில் நேரில் இயற்கையாய் முளைத்திருக்கும் அரச மரத்திற்கு உபநயனம், விவாஹம் செய்து வைத்து, சுந்தர விநாயகரையும் கோயில் கொள்ள, பெரியவாளாலேயே அருகிலிருந்து கும்

பாபிஷேகம் நடைபெற்று வரப்ர சாதியாய் ஸ்ரீ விநாயகர் விளங்கி வருகிறார்.

வேத பாராயண சபையினால், பல ஆண்டுகளாக பல வேத வித்துக்களைக் கொண்டு, பிரதி தினம் வேத பாராயணம் நடந்து வருகிறது. பிரதி வருஷமும் கிருத்திகா மண்டல பாராயணமும், வருஷாந்திர விழாக்களும் நடத்தி சம்பாவனைகளும் அளிக்கப்படுகிறது.

சதுர்த்தி, கணபதி ஹோமங்களும், ப்ரதோஷ கட்டளைகளும், மற்ற எல்லாவித விசேஷ நிகழ்ச்சிகளும், நடந்து வருகின்றன. அவ்வப்போது சத்கதா காலக்ஷேபங்கள் தகுந்த வித்வான்களால் நடக்கவும், இடமளிக்கப்பட்டு வருகிறது.

ஸ்ரீ G. R. நடராஜ அய்யர் அவர்களை மானேஜிங் டிரஸ்டியாகக் கொண்ட பகவத் பாதாள், ஆஸ்தான நிர்வாக சங்க நிர்வாகிகளாலும், ஸ்ரீ சங்கர பக்தஜன சபையினராலும் ஸ்ரீ சங்கர ஜயந்தி விழா மிகவும் சிறப்புடன் ஆண்டு தோறும் நடைபெற்று வருகிறது.

ஆதி சங்கரர் கிரந்தங்களை விளக்கி உபன்யாஸம் செய்து வர பல பண்டிதர்களைக் கொண்டு சிரத்தையுடன் நடத்தி வரும் ஸ்ரீ சங்கர பக்த ஜன சபையினரால் ஆருத்திரா தீபாராதனையும், நடத்தி வரப்படுகிறது. டிரஸ்டிகளின் சிரத்தையும் ஸ்ரீ S. சுப்பராம ஐயர் அவர்களின் சீரிய மேற்பார்வையும் கூடி திருப்பணிகள் மேலும் மேலும் சிறந்தோங்க ஆஸ்திகர்கள் ஒத்துழைத்து அன்பும், அருளும் அடைய, பகவத் பாதாள் அனுக்கிரஹம் செய்ய, பிரார்த்தனை செய்கிறேன்.

# புத்தரின் பொன் மொழிகள்

எல்லா முயற்சிகட்கும் முன்னேடியாயிருப்பது மனம்; உனரும் திறன்கள் அனைத்திலும் மிக மிக உயர்ந்ததும் மனம். சொந்தக் கருத்துக்கள் அனைத்தும் உதிக்கும் இடமும் மனமே.

காட்சிகள் அனைத்திற்கும் மனமே தூதன். வியாவகாரிகப் பிரபஞ்சத்திலுள்ள எல்லா மூலப் பொருள்களினும் மிக நுண்ணியது மனமே. புறத்தே உருவைக் காணும் உணர்வெல்லாம் மனத்திலே உற்பத்தியாவன. தூய உள்ளத்தோடும் பேசுபவனே செயல் புரிபவனே—அவனேடும் அவனது சொந்த நிழலைப் போன்றே ஆனந்தம் உறையும்.

“பிறர் என்னைப் பகைக்கின்றனர். என்மீது அவநம்பிக்கை கொள்கின்றனர். என்னைத் தவருகக் கருதுகின்றனர். என்னை வஞ்சிக்கின்றனர்” — இத்தகைய நினைவுகட்குத் தன் உள்ளத்திலே இடங்கொடுப்பவன் தன்மீது அழிவைச் சுமத்தும் ஏதுக்களினின்றும் ஒருபோதும் நீக்கம் அடையான்.

தன்னை வென்றவன் தன்னிலும் ஆயிரமடங்கு பெருவலியுற்ற ஓராயிரம் பகைவர்களை வென்றும் தனது உணர்ச்சிப் பகுதிக்கு அடிமையாகி இருப்பவனைக் காட்டிலும் மெய்யாகவே வெற்றிமிக்க வீரனுவான்.

புற அழகையும் சிறப்பையும் நாடித் திரியும் உள்ளத்தன்; தன் ஐம்புலன்களையும் அடக்கியாள மாட்டாதவன்; தூய்மையற்ற உணவை அருந்துபவன், மடியுளனய், அறத்தின் தீரம் அற்றவன்;—ஆகிய இன்னுரை அறியாமையும் துயரமும், சத்தற்ற மரத்தைப் பெருங்காற்று முறிப்பது போன்று, வென்று வீழ்த்தும்.

குறைவறக் கூரை வேய்ந்து நன்கு மூடப்பெருத இல்லத்திற்குள்ளே மழைத்துளிகள் ஒழுகுவதுபோன்று, அகமுகமான தியானத்தில் அருவருப்புற்ற மனத்துள்ளே பற்றும் பகையும் மருளும் புகும்.

காமத்தால் நனையாத மனத்தன், பகையாற் பாதிக்கப்படாத

வன், நலம் தீது இரண்டையும் ஒதுக்கியவன்—இத்தகைய விழிப்புடையானுக்கு அச்சம் இல்லை.

வெறுப்பும் தீதும் மிகச் செறியும் ஒரு பகைவன் ஒருவற்குச் செய்யும் தீங்கினும் பார்க்க அளவற்ற பெருங்கேட்டை, அறியாமை நெறியைப் பின்பற்றும் ஒரு நெஞ்சு இழைக்கும்.

காத்தற்கு அரியதும், அடக்குதற்கு அரியதுமான, சலிப்புற்ற நிலையற்ற மனத்தைப் புத்திமான் நேராக்குகிறான்; வில்லாளி அம்பினை நேராக்குவதுபோல.

மனம் தடுத்தற்கரியது, மிக மிக நுண்மையது, விரிவுடையது, இச்சைப்படியெல்லாம் திரிவது—அத்தகைய மனதை அடக்குதல் நன்று; அடங்கிய மனம் ஆனந்தம் பெற வாய்ப்பு அளிக்கும்.

எவனது மனம் உறுதியற்றதோ, உயர்ந்த அறத்தினை அறியாததோ, எவனது நம்பிக்கை அசைவுறுமோ—அத்தகைய மனிதனின் ஞானம் ஒரு நாளும் நிறைவெய்தாது.

வெகு தொலை செல்வதும், தனியே திரிவதும், உடலற்றதும், (உணர்வுக்கு நிலையமாகிய) குகையில் இருப்பதும் இம்மனம். அதை அடக்குவோர் மாரனின் (மாயையின்) கட்டுகளினின்றும் விடுபடுவர்.

அன்னையோ, தந்தையோ வேறெந்த உறவினரோ இயற்ற இயலாததை, நன்கு செலுத்தப்பட்ட மனம் இயற்றுகின்றது. அவ்வாயிலாக ஒருவனை உயர்த்துகின்றது.

ஒரு பகைவன் இன்னொரு பகைவனுக்கும், வெறுப்புடையோன் இன்னொரு வெறுப்புடையோனுக்கும், என்னென்ன தீங்கு இழைக்கலாமோ, அதனினும் பெருந்தீங்கை நன்கு செலுத்தப்படாத மனம் ஒருவற்கு இழைக்க இயலும்.

பழகாமையே தியானத்திற்கு மாசு, துப்புறவின்மையே உடலிற்கு மாசு; சோம்பலே புலன்கட்கு மாசு; சஞ்சலமே மனதிற்கு மாசு.

எவனது மனது ஆசையின் நீங்கிய தூய்மையுற்றதோ, அத்தகைய விழிப்புள்ள மனிதனுக்கு அச்சம் யாதும் இல்லை.

தீமை அனைத்தையும் விலக்குதலும், நற்செயல்களைப் புரிதலும், ஒருவன் தன் மனத்தைத் தூயதாக்கலும் — இதுவே புத்தர்களின் கொள்கையாம்.



# Registered Trade (Divine) Mark - Beware

ஸ்ரீ வ. கிருஷ்ணஸ்வாமி சர்மா

சிறந்த பொருள்களைத் தயாரிக்கும் வியாபாரிகள் போலிகளிலிருந்து அவைகளை அடையாளம் கண்டுகொள்வதற்காக அப்பொருள்களுக்கு ஒரு வியாபாரச் சின்னம் (Trade Mark) இடுவது வழக்கம். அதைத் தகுந்த அதிகாரிகளிடம் பதிவு செய்து அதைத் தங்களுடைய உரிமைச் சின்னமாக ஆக்குவார்கள்.

போலிகளைத் தயாரிப்பவர்கள் இந்த Registered Trade Mark -ஐ (பதிவு பெற்ற உரிமைச் சின்னமான வியாபாரச் சின்னத்தை) உபயோகிக்க முடியாது. எனவே, போலித் தயாரிப்புக்களிலிருந்து உண்மையான சிறந்த தயாரிப்புகளை எளிதில் அடையாளம் கண்டுகொள்ள இந்த Registered Trade Mark தான் உதவி புரியும்.

அதேபோல் போலிகளான நிரீச்வரவாதிகளிடமிருந்து உண்மையானவர்களான சிவபக்தர்களை எளிதில் அடையாளம் கண்டுகொள்வதற்காக ஏற்பட்டதுதான் திருநீறு. இந்த உரிமைச் சின்னத்தை (Registered Divine Mark-ஐ) சிவபக்தர்கள் எப்போதும் நெற்றியிலும் உடலின் மற்ற பாகங்களிலும் தரித்துக்கொள்ள வேண்டும். இல்லையேல் அவர்களுக்கும் போலிகளுக்கும் வித்தியாசம் தெரியாது.

ஆனால் இந்த உண்மையை உணராமல் நம் இளைஞர்களில் சிலர் உள்ளத்தில் சிவபக்தி நிறைந்திருந்தாலும், நெற்றியில் திருநீறு அணிவதை அவமானமாகக் கருதுகிறார்கள். அந்தோ பரிதாபம்! என்னே இவர்கள் அறியாமை!

வியாபாரிகள் தங்கள் சரக்கு சிறந்ததாக அமைவதற்கு எவ்வளவோ பாடு படவேண்டும். அப்படி அமைந்த பின்னரும் அவைகளைப் போலிகளிடமிருந்து பாதுகாப்பதற்காக தாங்களே ஒரு Registered Trade Mark-ஐ அமைத்து அதற்கு பதிப்புரிமை பெறுவதும் எளிதல்ல. ஆனால் சிவபக்தர்களின் சிறப்பைப் பறைசாற்றும் திருநீறு என்னும் Registered Divine Markஐ நம் பெரியோர் நமக்கு எளிதில் காட்டித் தந்திருக்கின்றனர். இதை நெற்றியில் அணிந்து கொள்ளுவது மிக எளிது. அதைமட்டும் தவறாமல் அணிந்து வந்தால் அவர்களுக்குப் போலிகளிடமிருந்து எல்லாவிதமான பாதுகாப்பும் ஏற்படும்.

வியாபாரிகளின் Registered Trade Markஐ போலிகளின் தயாரிப்பாளர்கள் உபயோகிக்கத் துணிந்தாலும் துணிவார்கள். அப்படித் துணிந்து உபயோகித்த பின்னரும் போலிகள் போலிகளாகவே

இருக்குமேயல்லாது அவைகள் உண்மையாக ஆகமுடியாது.

சிவபக்தர்களின் Registered Divine Markன் விஷயம் அப்படிப் பட்டதல்ல. அதைப் போலிகளான நிரீச்வர வாதிகள் உபயோகிக்கத் துணியார்கள். அப்படி தப்பித் தவறி யாராவது உபயோகிக்கத் துணிந்தார்களானால் அவர்களுடைய போலித்தன்மை நீங்கி அவர்களும் உண்மை சிவபக்தர்களாக ஆகிவிடுவார்கள்.

இத்தகைய மகிமை வாய்ந்த தெய்விக Registered Divine Mark ஆன திருநீற்றை நம் இளைஞர்களில் சிலர் அணியத் தயங்குவதற்கு அவர்கள் அதனுடைய பெருமையை அறியாததே காரணம். அவர்கள் அதை அறிந்து கொள்ள, நடமாடும் தெய்வமான ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் அவர்களின் பின்வரும் அருள்வாக்குப் பெரிதும் உதவும்:—

விபூதிதாரணம்

"உலகத்தில் பச்சையாக ஒரு இலை இருக்கிறது. மஞ்சளாக ஒரு துணி இருக்கிறது இப்படி அனேகம் வஸ்துக்கள் அனேக வர்ணங்களில் எதைக் கொண்டு வந்து நெருப்பில் போட்டாலும் அது கரியாகிவிடுகிறது. எந்தப் பொருள் எந்த வர்ணமாக இருந்தாலும் கருகிக் கருப்பாகி விடுகிறது. 'கருப்பு ஒன்றுதான் எல்லாப் பொருள்களுக்கும் ஸ்வபாவ நிறமோ, பாக்கி நிறம் எல்லாம் அவை பூசிக்கொண்ட சாயமோ?' என்று தோன்றுகிறது. ஆனால் 'ஒரு வஸ்துவின் சாயம் வெளுத்துப் போயிற்று' என்று சொல்லுகிறதுதான் வழக்கம். ஏன்? கருகிக் கருப்பான இந்த பண்டங்களையும் இன்னொரு முறை அக்கினியில் ஸ்புடம் போட்டால் அவை அனைத்தும் நீற்றுப் போகின்றன. இப்படி நீறு ஆகிவிட்டபோது எல்லாம் வெளுப்பு. சாயம் வெளுத்துப் போய்விடுகிறது.

இந்த உலகமே பலவிதமான சாயங்களைப் பூசிக்கொண்டிருப்பதுதான். அந்தச் சாயங்கள் யாவும் போனபின் எஞ்சியிருப்பது உண்மைப் பொருளான ஒன்றுதான். அதுதான் ஆண்டவன். உண்மை என்பது வெண்மை. நம் உடம்பில் உள்ள பொருளெல்லாம் சாயம். அதில் உண்மையை நிலைப்படுத்திக் கொள்வதற்காக வெண்மையான திருநீற்றைப் பூசச் சொன்னார்கள்.

சிவசின்னங்களின் பயன்

வெளியே நாம் செய்கிற சில ஸம்ஸ்காரங்களினால் உள்ளே சில சில நன்மைகள் உண்டாகின்றன. இவை எல்லாம் வெளிவேஷம் என்று நினைத்தால் வெறும் வேஷமாகவே போய்விடுகின்றன. "ஆத்மார்த்தமாக ஜீவனைப் பரிசுத்தம் செய்துகொள்வதற்காகவே விபூதி, ருத்ராக்ஷம் போன்ற சின்னங்களை அணிகிறேன்" என்று நினைத்தால் உண்மையிலேயே உள்ளே பரிசுத்தம் ஏற்படுகிறது. புறச் சின்னங்களும் ஆத்மாவுக்குப் பயன்படுகிறது.

இதைவிடத் தெளிவாகவும் அழகாகவும் விபூதியின் பெருமையை விளக்க வேறு யாரால் முடியும்?

சிவ பக்தர்களுக்கு Registered Divine Mark விபூதி என்பது போல் விஷ்ணு பக்தர்களான வைஷ்ணவர்களுக்கு திருமண் ஸ்ரீ சூர்ணம் Registered Divine Mark ஆகும். எனவே, விபூதியின் பெருமையை விளக்குவதற்காகச் சொல்லப்பட்டதெல்லாம் இதற்கும் பொருந்தும்.

விஷ்ணு பக்தர்களான இளைஞர்களாக இருந்தாலும், சிவ பக்தர்களான இளைஞர்களாக இருந்தாலும் அவரவர் ஸம்ப்ரதாயப்படி நெற்றிக்குறி யணிவதை அவமானமாகக் கருதாமல் இரவும் பகலும் அவைகள் நெற்றியில் பளிச்சென்று காட்சியளிக்கும்படி அவைகளை அணிதல் வேண்டும்.

சுருங்கக் கூறின், இவர்கள் நெற்றிக்குறி யணிவது Registered Divine Mark - Beware — "பதிவு பெற்ற தெய்விகச் சின்னம்-பத்திரம்" என்று போலிகளுக்கு விடும் எச்சரிகையாகும் என்பதை மறக்கக்கூடாது.



---

# செய்திகள்

## ராசீபுரம்

ஆஸ்ரமத்திற்கு வருடத்திற்கு குறைந்தது ரூபாய் ஐந்து நன்கொடை அளிப்பவர்களுக்கெல்லாம் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 8 ந் தேதி குருதேவ் ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் 32 பக்கமுள்ள தமிழ் நூல் வந்து சேரும். நீங்களும் உங்கள் ஆன்மீக நண்பர்களும் பங்கு கொள்ளலாம்.

நன்கொடைகளை காரியதரிசி, தெய்வீக வாழ்க்கைச் சங்கம், இராசிபுரம், சேலம் ஜில்லா, என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்கலாம்.

## ஆவடி

ஆவடி டவுன்ஷிப்பில் உள்ள ஸ்ரீ கிருஷ்ணன் கோயிலை ஸ்ரீ காஞ்சிஜகத்குருவின் ஆசியுடன் ஒன்றரை லெட்ச ரூபாய் செலவில் புதுப்பிக்கத் திட்ட மிட்டிருக்கிறார்கள். லெப்ட். கர்னல் என். ஆர். ஆர் சர்மா, செயலாளர், திருப்பணிக் கமிட்டி, ஸ்ரீ கிருஷ்ணன் கோவில், ஆவடி, சென்னை - 54 என்பது தொடர்பு கொள்ளவேண்டிய விலாசமாகும்.

## அரக்கோணம்

இங்கு முழுக்க முழுக்க இளைஞர்களால் அரசியல் சார்பற்று சுவாமி விவேகானந்தா மன்றம் என்ற பெயரில் மன்றம் நடத்தப் பட்டு வருகிறது. இங்கு இலவச நூலகம் ஒன்று நிறுவப்பட்டுள்ளது. இந்த நூலகம் ஆன்மீக சம்பந்தமான நூல்களை மட்டுமே, ஆன்மீக சம்பந்தமான பத்திரிகைகளை மட்டுமே கொண்டு விளங்கும். மன்றத்திற்கு ராமகிருஷ்ண விஜயம், அருள் போன்ற பத்திக்கைகள் வந்து கொண்டிருக்கின்றன.

ஆன்மீக பத்திரிகைகள், புத்தகங்கள் இலவசமாக அனுப்பி உதவ விரும்புவோர் தொடர்புகொள்ள வேண்டிய முகவரி: செயலாளர், சுவாமி விவேகானந்தா மன்றம், 13, முருகப்ப நாயக்கர் வீதி, அரக்கோணம். (வ. ஆ. மா)

## சின்ன திருப்பதி, (சேலம்)

சேலத்திலிருந்து ஒன்றரை மைல் தூரத்திலுள்ள சின்ன திருப்பதியில் உபந்யாஸக சக்கரவர்த்தி ஸ்ரீ அனந்த ராம தீக்ஷிதர் அவர்கள் அதிஷ்டானம் அமைந்துள்ளது.

ஸ்ரீ அனந்தராம யதீந்திராளின் மூன்ருவது வருஷ ஆராதனை மஹோத்ஸவம் சென்ற மாதம் 26 ந் தேதியிலிருந்து 28ந் தேதிவரை வெகு சிறப்பாக நடந்தது ஏராளமான பக்தர்கள் வந்திருந்து எல்லா வைபவங்களிலும் கலந்து கொண்டு ஸ்ரீ மஹாகுருவின் அனுக்கிரஹத்திற்குப் பாத்திரர் ஆனுர்கள்.

ஸ்ரீ அதிஷ்டானத்திற்கு உதவி செய்பவர்கள், துகை, அல்லது சாமான்கள் அனுப்ப வேண்டிய விலாஸம்.

ஸ்ரீ S. A. ராமகிருஷ்ணன், B. Com. A. C. A.,

No 3, வடக்கு மரவனேரி இரண்டாவது தெரு,

சேலம் - 7

---

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனுதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: டாக்டர். காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார். தியாகராயநகர், சென்னை-17